# முன்னுரை

உலகில் மனிதன் வாழ்வாங்கு வாழவேண்டும். அதற்குச் சிறந்த குறிக்கோளும் நெறிமுறையும் தேவை. இவற்றைத் தருவன சமயங்கள் ஆகும். மக்களது தரத்திற்கு ஏற்பச் சமயங்கள் பழையனவும் புதியனவுமாகப் பல விளங்குகின்றன. அவற்றுள் ஒன்று சைவ சமயம் ஆகும். ''சைவம் சிவத்துடன் சம்பந்தமாவது'' [1] என்பார் திருமூலர். முன்னைப் பழமைக்குப் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்குப் புதுமையாய் விளங்கும் சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு ஒழுகப்பெறும் தொன்மை வாய்ந்ததொரு சமயம் சைவம் ஆகும். தனிப்பட்டதொரு ஞானப் பெரியவர்களால் உண்டாக்கப்பட்ட சமயம் போல் அல்லாமல் காலத்திற்கும் இடத்திற்கும் அப்பாற்பட்டு விளங்கும் முழு முதற் பரம்பொருள் போன்றே விளங்குகின்ற ஒரு சிறப்பு இச்சமயத்திற்கு உண்டு. இச்சமயத்தளத்தில் பல வகையான கோட்பாடுகள் தோன்றியுள்ளன. அவற்றுள் ஒன்று சைவ சித்தாந்தம் ஆகும். சைவ சித்தாந்தக் கோட்பாடுகளுக்குப் பிரமாண நூல்களாக வேதங்களும், சிவாகமங்களும் விளங்குகின்றன. அவ்வகையில் ஏற்பட்ட சிவாகமங்களுள் ஒன்று சுப்பிரபேதாகமம் ஆகும். சுப்பிர பேதாகமத்தை ஆய்வு செய்வதற்குப் பின்புலமாகச் சிவாகமங்கள் பற்றியும் சைவ சித்தாந்தம் பற்றியும் குறிப்பிடுவது அவசியமாகிறது. சிவாகமங்கள் பற்றியும் சுப்பிரபேதாகமம் பற்றியும் அடுத்த இயலில் தனியாக விளக்கப்படவிருப்பதால் சைவ சித்தாந்தம் பற்றிய ஓர் அறிமுகத்தை இனிக் காணலாகிறது.

## 1.1. சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்

சைவ சமயத் தளத்தில் தோன்றிய எல்லாச் சமயத் தத்துவ விளக்கங்களையும் தன்னுள் கொண்டு தனக்கே உரிய தனிச் சிறப்போடு விளங்குவது சைவ சித்தாந்தம் ஆகும். இதனைச்

> ''சித்தாந்தம் ஒரு சமரச ஞானக்கடல் ; அதில் எல்லாச் சமயங்களும் வந்து கலக்கின்றன. அது சமயாதீதப் பொருளை எட்டும் ; சமயத்திற்கெல்லாம் தாயகமாகவும் அப்பாலும் பரந்து அகண்டமாக விளங்கும்''[2]

என்று யோகி சுத்தானந்த பாரதியார் குறிப்பிடுகிறார். சைவ சித்தாந்தம் என்பதை ஒரு சொல்லாகக் கொண்டும், தனித்தனிச் சொற்களாகக் கொண்டும் பொருள்

கூறுவர். சைவ சித்தாந்தம் என்ற சொல் சைவம், சித்தாந்தம் என்ற இரு சொற்கள் இணைந்த ஒரு சொல்லாகும். எனவே, சைவ சித்தாந்தம் என்பதன் நுண்பொருளை அறிந்து கொள்வதற்குச் சைவம், சித்தாந்தம் என்ற இரு சொற்கள் குறிக்கும் பொருள், அவற்றின் தொன்மை ஆகியன பற்றி முதலில் விளக்குவது அவசியமாகிறது.

### 1.1.1. சைவம் - விளக்கம்

சிவனுடன் ஒன்றியிருப்பதாகிய ஒரு நிலையை எடுத்துக் கூறும் சமயநெறியே 'சைவம்' ஆகும்.[3] சிவம் என்பதற்குச் 'செம்பொருள்', 'அன்பு', 'மங்கலம்' எனப் பொருள்கள் உண்டு.

> ''செம்பொருளே சிவம் என்று கூறுவர். புலன் கடந்த பொருளியலாளர்களின் ஆய்வுக்கு முடிவாகவும், உள்ளத்தியலார் ஆய்வு முடிவாகவும், அறவழியில் நடப்பவர்களின் அனுபவத்தின் எல்லையாகவும், அருளாளர்கள் அருணோக்கத்தின் முடிவாகவும் இணைந்து நின்று இலங்கும் பரம்பொருளே 'செம்பொருள்' எனக் கொள்ள வேண்டும். மேலும், செம்பொருள் என்பது அனைத்து நன்மைகளுக்கும் தனி நிலையில் 'சிறப்பு' என்றும் பொது நிலையில் எல்லா நன்மைகளையும் வாழவைக்கும் உயிர்ப்புத் தன்மையாகவும் நின்று அவற்றை நன்னிலையில் நிறுத்தும் 'நன்மை'ப் பொருள் என்றும் பொருள் கொள்ளல் வேண்டும்''[4]

என்று வை. இரத்தினசபாபதி விளக்கம் கூறுகிறார். மேலும், 'சிவம்' என்பதற்கு நன்மை, கடவுளின் அறிவு நிலை, முத்தி எனக் கழகத் தமிழ் அகராதி பொருள் தருகிறது.[5] ஆகச் சிவம் என்பதற்குப் பொருள், 'செம்பொருள்' என்பதும் அதற்குப் பரம்பொருள், நன்மைப்பொருள் ஆகிய விளக்கங்களும் பெறப்படுகின்றன.

சிவம் என்பதும் அன்பு என்பதும் ஒன்றே ஆகும். இதனைத் திருமூலர்,

> ''அன்புசிவம் இரண்டு என்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
> அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே''[6]

என்று குறிப்பிடுகிறார். அடுத்துள்ள 'மங்கலம்' என்ற சொல்லுக்கு 'நன்மை' என்ற பொருளைப் பரிமேலழகர் கொள்வார்[7]. எனவே, சிவம் என்பதற்கு நன்மைப் பொருள் கொண்டு பார்க்கும்பொழுது அதற்கு மங்கலம் என்ற சொற்பொருளும் பொருத்தமாக அமைகிறது.

சைவத்தின் அடிப்படையான உண்மைகளையும், சைவம் கடவுளைச் 'சிவம்' என்றும், 'செம்பொருள்' என்றும் சிறப்பித்துக் கூறப்படுவதற்கான காரணத்தையும் க. வச்சிரவேல் முதலியார்,

> ''கடவுள் உயிர்களின் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்ட பொருளாயினும் மெய்யுணர்வு நிலையில் தூய பேரின்பப் பொருளாய் அனுபவிக்க வருவது என்பதும், அத்தகைய உண்மையனுபவத்தை இம்மையிலேயே எய்தி எய்தும் பெருமக்கள் உளர் என்பதும், சைவத்தின் அடிப்படையான உண்மைகளாகும். ஆதலின் கடவுளைக் கலையுணர்வு மட்டும் கொண்டு பேசாது, உண்மை அனுபவம் பற்றி வழங்கலுறின் அதனை எத்தகைய மாறுதலும், இல்லாத தூய பேரின்பப் பொருள் எனக் குறிப்பிடுதலே பொருத்தம் ஆகும். ஆதல் பற்றி அஃது இந்நெறிக் கண் 'சிவம்' எனவும் 'செம்பொருள்' எனவும் சிறப்பித்துச் சொல்லப்படுவதாயிற்று''[8]

என்று குறிப்பிடுகிறார். சைவ சமயமே உண்மைச் சமயம் என்பதையும், அதுவே முத்தி நெறிக்கு வழிகாட்டும் என்பதையும் தாயுமானவர்,

> ''சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
> கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
> பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதருந்
> தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே''[9]

என்று கூறுவதும் குறிப்பிடத் தக்கதாகும்.

### 1.1.2. சித்தாந்தம் - பொருள் விளக்கம்

சித்தாந்தம் என்ற சொல்லுக்குப் பொருள் 'முடிந்த முடிவு' என்பதாகும்.[10] சித்தம் + அந்தம் சித்தாந்தம் என்பதாகும். சித்தம் என்ற சொல் நிலை நிறுத்தப் பெற்ற உண்மை என்றும், அந்தம் என்பது முடிவு என்றும் பொருள் தரும்.

இவ்விரண்டு சொற்களும் இணைந்து நின்று முற்ற முடிந்த மெய்ப்பொருள் கொள்கை என்னும் கருத்தினைச் சித்தாந்தம் என்ற சொல் குறிக்கிறது. [11] இப்பொருளை வலியுறுத்தும் வகையில் சைவ சித்தாந்த அகராதி 'சித்தாந்தம்' என்பதற்குப் பின்வருமாறு விளக்கம் தருகிறது.

> சித்தம் - சிந்தனை; அந்தம் - முடிவு. சித்தம் + அந்தம் உள்ளத்தை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ச்சிப் பட்டறிவுடன் மேற்கொண்டு முடிந்த முடிபு அல்லது மேற்கொள்ளப்படும் நெறிமுறை நெறியம் எனலாம். ஆகையால் இதனை மறுப்பதற்கு ஏதுமிலை''[12]

'சித்தாந்தம்' என்பது சைவ சித்தாந்தத்திற்குரிய பெயராகும். சித்தாந்தமே சித்தாந்தம். அதற்கு வேறானவை பூர்வ பக்கங்கள் என்ற இச்செய்தியை இரத்தினத் திரயம்,

> ''சித்தாந்தம் ஒன்றுதான் சித்தாந்தமாகும். அதாவது முடிந்த முடிபாகும். மற்றவை எல்லாம் பூர்வ பக்கங்களே. சிவன் ஒருவன்தான் ஆப்தன்''[13]

என்று கூறுகிறது. மேலும், இதுபற்றி ஆ. வேலுப்பிள்ளை கூறும்பொழுது,

> ''சித்தாந்தம் என்ற சொல், தர்க்க ரீதியாக அடையப்பட்ட முடிவைக் குறிக்கும் ...... அளவை முறைகளால் நிராகரிக்கப்பட்ட தத்துவ முறைகள் பூர்வபக்கம் என வழங்கப்பட நிறுவப்பட்ட நெறி சித்தாந்தம் என வழங்கப்பட்டது. சைவ சித்தாந்தத்தை ஏனைய தத்துவ முறைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது சைவ சித்தாந்திகளுக்கு ஏனைய தத்துவ முறைகள் யாவும் பூர்வ பக்கமாகத் தெரிவதால், இது சைவ சித்தாந்தமென வழங்கப்படுவதாயிற்று.''[14]

என்று குறிப்பிடுவதும் ஈண்டு நோக்கத் தக்கதாகும்.

### 1.1.2.1. வேதாந்தமும் சித்தாந்தமும்.

வேதாந்தத்திற்கும் சித்தாந்தத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. இரண்டும் வேறு வேறாகத் தெரிந்தாலும் முடிவில் ஒன்றின் தெளிவாகவே மற்றது உணர்த்தி நிற்கிறது. இதனை யோகி சுத்தானந்த பாரதியார்,

> ''நம் அருட்பெரியார் இரண்டு இன்ப வழிகளைக் காட்டினார். ஒன்று வேதாந்த வழி; மற்றொன்று சித்தாந்த வழி; 'வேதம்' என்றால்

அறிவு ; 'வேதாந்தம்' என்றால் அறிவின் முடிவு. அறிவின் அந்தம் பரம்பொருள் அடைவே ; வேதாந்தம் தன்னில் பரமனைக் கூடும் யோக மார்க்கம். வேதாந்தத் தெளிவே சித்தாந்தம். வேதாந்தம், 'அது நீ ஆகிறாய்' (தத்வமஸி) என்று அடங்கும். சித்தாந்தம் 'அதுவானால் அதுவாவார், அதுவே சொல்லும்' என்னும்''[15]

என்று குறிப்பிடுகிறார். மேலும் இது குறித்து ஜி. வரதராசன்,

''வேதத்தின் அந்தமான உபநிடதங்கள் கூறும் முடிவு வேதாந்தம். அது 'நானே பிரம்மம்' (அஹம்பிரம்மாஸ்மி) என்பது. சித்தர்கள் அறிந்து கண்ட முடிவு சித்தாந்தம். அது 'நீ சிவம் ஆகிறாய்' (சித்துவமசி) என்பது. சொல்லும் முறையில் வேறுபாடன்றிப் பொருள் முறையில் இல்லை''[16]

என்று கூறுவதும் இங்கு நோக்கற்பாலதாகும்.

### 1.1.3. சைவத்தின் தொன்மை

சைவ சமயம் மிகப் பழைமை வாய்ந்ததாகும். அதன் காலத்தைச் சரிவர வரையறுக்க இயலாத நிலையிலேயே இருந்து வருகிறது[17]. இது பற்றி மா. இராசமாணிக்கனார்,

''சைவசமயம் சிந்துவெளி நாகரிகத்துக்கும் (கி.மு.4000க்கு) முற்பட்ட பழைமையுடையது என்பதே ஆகும். அஃது இன்னும் எவ்வளவு பழைமை உடையது என்பதை வரையறுக்கக் கூடவில்லை. அச்சமயம் உலகத்திலேயே மிக்க பழைமை வாய்ந்தது, இன்றளவும் இருந்து வரும் சமயம் என்பதை மறத்தல் ஆகாது''[18]

என்று குறிப்பிடுகிறார். சிந்து வெளி நகரங்களான மொகஞ்சதாரோ, ஹரப்பா ஆகியவற்றில் நிகழ்த்தப் பெற்ற அகழ்வாராய்ச்சிகள் சைவ சமயக் கருத்துக்களின் தொன்மையை வேத காலத்திற்கும் முன்னதாகக் காட்டுகின்றன.[19] சிவனைக் குறிக்கப் பலவகைச் சின்னங்கள் உள்ளன. இலிங்க வழிபாடு சிந்துவெளி மக்களிடம் இருந்ததாக அங்குக் கிடைக்கப்பெறும் தடயங்களின் மூலம் தெரிய வருகிறது. இதனை மா. இராசமாணிக்கனார், ''சிந்து வெளிமக்கள் இலிங்க வணக்கத்தினர் என்பதை அங்குக் கிடைத்த பல இலிங்கங்களைக் கொண்டு அழுத்தமாகக் கூறலாம்''[20] என்பார். கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த

பாணினி என்பவரின் 'அஷ்டாத்யாயீ' என்ற நூலில் வரும் சிவன் பற்றிய குறிப்புகள் அக்காலத்தில் நிகழ்ந்த சைவ வழிபாட்டினை அறியத் துணை புரிகின்றன.[21] பதஞ்சலி என்பவரின் காலத்தில் சிவ வழிபாடு சிறந்து விளங்கியதையும், சிவனை வழிபட்டோர் 'சிவ பாகவதர்' என அழைக்கப்பட்டனர் என்பதையும் அவரின் நூல்கள் குறிப்பிடுகின்றன.[22] இவ்வாறாகச் சைவத்தின் தொன்மை புலனாகிறது.

### *1.1.4. சைவ சித்தாந்தம் எனும் சொல் வழக்கு*

சைவசமயம் மிகப் பழைமை வாய்ந்ததாக இருந்தபோதிலும், சைவ சித்தாந்தம் எனும் சொல் வழக்கு முதன் முதலாகத் திருமந்திரத்தில்தான் இடம் பெறுகிறது. அதாவது,

> ''தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே''[23]

என்று திருமந்திரம் கூறுகிறது. காமிகாகமத்திலும் 'சைவ சித்தாந்தம்' என்ற சொல் இடம் பெற்றுள்ளது.[24] கல்வெட்டுக்களைப் பொறுத்த மட்டில் 'சைவசித்தாந்தம்' என்ற சொல் முதன் முதலாகப் பல்லவர்களது கல்வெட்டில்தான் காணப்படுகிறது என்றும், இராச சிம்மனுடைய (கி.பி 680 -700) வடமொழிக் கல்வெட்டில் அது உள்ளது என்றும் கூறுவர்.[25]

### *1.1.5. சைவ சித்தாந்தத்தின் தனிச்சிறப்பு*

எந்த ஒரு தத்துவமும் வாழ்க்கையோடு இணையும் பொழுதுதான் அதற்கு வலுவும், வேகமும் ஏற்படுகிறது. தத்துவம், சமயம், வாழ்க்கை என்பவை இணைந்து விளங்கும் ஒரு வாழ்வியல் தத்துவமாகச் சைவ சித்தாந்தம் விளங்குகிறது. இதனைக் க. கைலாசபதி,

> ''தென்னாட்டில் உருப்பெற்று வளர்ச்சியடைந்த சைவ சித்தாந்தம் இந்தியாவில் முகிழ்ந்த ஏனைய தத்துவங்களில் இருந்து வேறுபடுவது சமயத்தையும் வாழ்க்கையையும் ஒன்றிணைத்த தன்மையிலேயேயாகும். தத்துவத்தையும் வாழ்க்கையையும் பிரிக்க இயலாதவாறு ஒரு சேர வைத்துள்ளது சித்தாந்தம்''[26]

என்று குறிப்பிடுவார். ''சைவ சித்தாந்தம் வாழும் ஒரு சமயத் தத்துவ நெறி''[27] என்று பெ. கிருஷ்ணன் குறிப்பிடுவார். எனவே, சைவ சமயத் தளத்தில் பலவகையான கோட்பாடுகள் கொண்ட சமயங்கள் உருவாகியிருக்கின்ற

போதிலும், சைவ சித்தாந்தமே சிறந்ததாக விளங்குகிறது. சைவ சித்தாந்தத்தைச் சித்தாந்த சைவம் என்றும் கூறுவதுண்டு. பல வகையான சைவ சமயங்கள் குறித்தும், அவற்றுள் சித்தாந்த சைவமே சிறந்தது என்பதைக் குறித்தும் அபிதான சிந்தாமணி விரிவாகக் கூறுகிறது. அதாவது,

> "சிவமூர்த்தியைத் தெய்வமாகக் கொண்ட சைவ மதமானது, ஊர்த்துவசைவம், அநாதிசைவம், ஆதிசைவம், மகாசைவம், பேதசைவம், அபேதசைவம், அந்தரசைவம், குணசைவம், நிர்க்குணசைவம், அத்துவாசைவம், யோகசைவம், ஞானசைவம், அணுசைவம், கிரியாசைவம், நாலுபாதசைவம், வீரசைவம், சுத்தசைவம், என்று பல திறப்படும். பின்னும் காளாமுகம், காபாலம் முதலியவும் உள. அவற்றுள் சித்தாந்த சைவம் உயர்ந்தது"[28]

என்பதாகும். ஆகவே, சைவ சித்தாந்தம் என்பதற்கு உயிர்கள் சிவபெருமானை அடைந்து உய்வதற்கு வழிகாட்டும் எல்லாச் சமயங்களிலிலும் சிறந்தது, எல்லாச் சமயங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருப்பதுமாகிய சமயம் என்பது பொருளாகும் என்பர்[29]. இன்னும், இதன் தனிச்சிறப்பினைக் கி. இலக்குமணன்,

> "சமயத்தையும், தத்துவ ஞானத்தையும் இணைத்து, ஆன்மாக்களின் நித்தியத்துவத்தையும், தனித் தன்மையையும் கெடுக்காது நிலைநாட்டி, இவ்வுலக வாழ்வையும், உண்மையுடையதும் பயனுடையதுமாக்கி, இம்மை, மறுமை, இரண்டையும் சிறப்புடையன ஆக்கிய தனிச்சிறப்பு சைவ சித்தாந்தத்திற்கு மட்டுமே உரியது"[30]

என்று கூறுவதும் குறிப்பிடத் தக்கதாகும்.

### 1.1.6. சைவ சித்தாந்தம் - தமிழர்களின் தத்துவம்

சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் தமிழ் இலக்கியங்களிலேயே தொடர்ந்து காணப்படுவதைக் கண்டு இத்தத்துவம் தமிழர்கள் கண்ட தத்துவமே என்று அறிஞர்கள் துணிகின்றனர். ஆ. வேலுப்பிள்ளை என்பார்,

> "சைவ சித்தாந்தத்திற்கு மூலம் என்று கூறக்கூடிய வகையில் தமிழில் சைவ சமயாசாரியர் வரலாறும் பக்திப்பாடல்களும்

**காணப்படுவதுபோல, வடமொழியில் ஏதுமில்லை. சிவஞான போதத்தைத் தொடர்ந்து தமிழில் வேறுபல சைவ சித்தாந்த நூல்கள் எழுந்தன. வடமொழியில் அப்படியும் ஏற்படவில்லை. சைவ சித்தாந்தம் வட இந்தியாவில் செல்வாக்குப் பெறவும் இல்லை. எனவே, சைவ சித்தாந்தம் தமிழர் கண்ட நெறியெனலாம்''[31]**

*என்று குறிப்பிடுகின்றார். திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஜி.யு. போப் அந்நூலின் முன்னுரையில்,*

**''சைவ சித்தாந்தமானது திராவிடர்களுடைய நுண்ணறிவின் வெளிப்பாடாக விளங்கும் மிகவும் தேர்ந்த படைப்பாகும். இந்தியச் சமயங்கள் அனைத்திலும் மிகுந்த செல்வாக்கு உடையது சைவ சித்தாந்தமாகும். இச்சமயம் தென்னிந்தியருக்குரியது. அதிலும் குறிப்பாகத் தமிழுக்கே உரியது. பெருமைக்குரிய தென்னிந்திய மக்களைப் பற்றிப் புரிந்து கொள்ள விரும்பும் ஒவ்வொருவரும் சைவ சித்தாந்தம் கற்பது இன்றியமையாததாகும்.''[32]**

*என்று குறிப்பிடுகிறார். தமிழினத்தின் சிந்தனையின் பயனாக, சிந்தனைத் தெளிவின் பயனாக, அறிவின் ஆக்கமாகத் தோன்றியதே சைவநெறி என்பர்.[33] சோ.ந. கந்தசாமி என்பார், சைவ சித்தாந்தம் தமிழரின் தத்துவம் என்பதை அறுதியிட்டுப் பின்வருமாறு கூறுகிறார்.*

**சைவ சித்தாந்தம் தமிழர்கள் கண்ட தத்துவம். சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபட்டு வரும் தமிழ்ப்பெரு மக்கள் உலகு, உயிர், இறை என்ற முப்பொருள் குறித்து முழுமையாக எண்ணி முற்ற முடிந்த முடிவாக வரையறுத்துக் கொண்ட மெய்ப்பொருள் நெறியே சைவ சித்தாந்தம் என்ற பெயரில் வழங்கி வருகிறது.[34]**

*மேலும், அவர், சைவ சித்தாந்தம் பற்றிய நூல்கள் தமிழில் மிகுதியாகக் காணப்படுவதாலும் சித்தாந்தத்தை விளக்கும் வகையில் ஆகம முறைப்படி எழுப்பப் பெற்ற கோவில்கள் தமிழகத்தில் மட்டும் காணப்படுவதாலும், இந்த நெறி தமிழர்களுக்குச் சிறப்பாக உரியது என்றும் கூறுவது. குறிப்பிடத் தக்கதாகும்.[35]*

### 1.1.7. சைவ சித்தாந்த வரலாறு

இத்தகைய சிறப்பு மிக்க சைவ சித்தாந்தம் காலந்தோறும் வளர்ந்து வந்து ஒரு படிநிலையைப் பெற்றிருக்கிறது. இன்னும் அது வர இருக்கின்ற புதுமையையும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவும் இருக்கிறது. இதுபற்றி அ.ச. ஞானசம்பந்தன்,

> "ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞான சம்பந்தப் பெருமான், அளவு மீறிய அறிவு வாதத்தால் இறைவனை அறிந்து கொள்ள முடியாது. எனவே அளவு மீறிச் சோதிக்க வேண்டா என்ற கருத்தில் "ஏதுக்காகலும் எடுத்த மொழியாலும், மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர் விட்டு நின்றுளன் எங்கள் சோதி" (3.54.5.) என்று கூறிப்போனார். ஏழாம் நூற்றாண்டுச் சைவம் இக்கூற்றைப் பொன்னே போல் போற்றி ஏற்றுக் கொண்டது. ஆனால் 13 ஆம் நூற்றாண்டில் இதற்கு நேர்மாறாக அறிவு வாதத்தால் பதியுண்மையை நிலைநாட்ட முயன்றனர். எந்த ஏதுக்களும் எடுத்த மொழியும் (பிரமாணங்கள்) பிள்ளையாரால் ஒதுக்கப் பெற்றனவோ, அவற்றையே அடிப்படையாகக் கொண்டு சிவஞானபோதம் பதியுண்மையை நிலைநாட்ட முயன்றது. ஆனால் பதிமூன்றாம் நூற்றாண்டுச் சைவம் இம்மாற்றத்தை அன்புடன் ஏற்றுக் கொண்டதே தவிர இது திருஞானசம்பந்தர் கூற்றிற்கு விரோதம் என யாரும் அதனை எதிர்க்கவில்லை. இதுவே வளர்கின்ற சமயம், உயிருள்ள சமயம் என்பதற்கு எடுத்துக் காட்டாகும். காலம் மாறும்போது ஏற்படும் மாறுதல்களை ஏற்றுக் கொள்ளாத எதுவும் காலாந்தரத்தில் வீழ்ந்து படுதல் இயல் பேயாகும்"[36]

என்று விளக்கம் தருவார். ஆக, காலந்தோறும், சைவ சித்தாந்தம் பெற்ற வளர்ச்சியைக் காணுதல் அவசியமாகும்.

சைவ சித்தாந்தக் கோட்பாடுகளின் வரலாற்றை அறிந்து கொள்வதற்குத் தமிழ் இலக்கியங்கள் பெரிதும் துணைபுரிகின்றன. தொல்காப்பியம் என்னும் பழைமை மிக்க தமிழ் இலக்கண நூலில் ஆங்காங்கே சைவ சித்தாந்தக் கருத்துகள் நுட்பமாக விரவிக் காணப்படுகின்றன. தமிழ் இலக்கணத்தை நிலை நிறுத்துவதே தொல்காப்பியத்தின் பெரு நோக்கமாயினும், அதனை நுணுகி நோக்கும்போது, அந்நூலினுள் சைவ சித்தாந்தக் கருத்துகள் இடம் பெற்றிருப்பது கண்டு கொள்ள

முடிகிறது. தொல் காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் சிவன் எனும் சொல் இடம்பெறவில்லை.[37] எனினும் அவற்றுள் வரும் கடவுள் பற்றிய குறிப்புகள் சிவனைத் தொடர்பு படுத்துவதாகவும் சைவ சித்தாந்தத்தைத் தொடர்பு படுத்துவதாகவும் உள்ளன. இதுபற்றி. ஆ. இராசரத்தின முதலியார்,

> "தொல்காப்பியத்தில் சிவபெருமான் எனும் பெயர் நேரிடையாகக் காணப்பெறவில்லை. எனினும் கடவுள் என்ற பெயர் பல இடங்களில் காணப்படுகிறது. கடவுள் என்ற சொல்லே சிவபெருமானைக் குறிக்கும். 'புல்லிலை எருக்கமாயினும் உடையவை கடவுள் பேணேம் என்னவாங்கு' என வரும் புறப்பாடலால் இவ்வுண்மை அறியப்படும்"[38]

என்று கூறுவது குறிப்பிடத் தக்கதாகும். மேலும், தொல்காப்பியத்தின் பொருளதிகாரப் புறத்திணையில் வரும்,

> 'கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"[39]

என்று நூற்பாவானது இறைவனது இயல்பினையும், உயர் இலக்கணத்தையும், மும்மலக் கேட்டினையும், முத்திப் பேற்றினையும், முறையாய் உணர்த்துவதாகவும் பொருள் உரைப்பர்[40]. இவ்வுலகமானது நிலம், நீர் தீ, காற்று, ஆகாயம், ஆகிய ஐந்து பூதங்களின் சேர்க்கையால் உருவானது என்பது பண்டைத் தமிழரின் தத்துவச் சிந்தனையாகும். இச் சிந்தனையைத் தொல்காப்பியம்,

> "நிலம் தீ நீர்வளி விசும்பொடு ஐந்தும்
> கலந்த மயக்கம் உலகம் ஆதலின்"[41]

என்று கூறுகிறது. ஐம்பூதங்களால் ஆகிய இந்த உலகத்தினை நிமித்த காரணராக நின்று தோற்றுவித்த தலைவன் சிவன் என்பது மதுரைக் காஞ்சியில் வரும்

> "நீரும் நிலனும் தீயும் வளியும்
> மாக விசும்போடு ஐந்து உடன் இயற்றிய
> மழுவாள் நெடியோன்"[42]

என்ற குறிப்பால் அறிய முடிகிறது.

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களுள், சிவன் ஒரு நிலத்திற்குரிய தெய்வமாகக் கருதப்படவில்லை என்றாலும் சிவன் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.[43] சிவனைக் குறிக்கும் பெயர்களும், சிவனுக்குரியதான தெய்வீகக் குறிப்புகளும், சங்க இலக்கியங்களில் காணப்படுவதை அ.ச. ஞானசம்பந்தன் விரிவாக ஆராய்ந்துள்ளார்.[44] சிவனுக்கு உரியனவாகச் சங்க இலக்கியங்களுள், 'உமாதேவியுடன் அர்த்தநாரியாக விளங்குதல்'[45] 'ஐம்பெரும் பூதங்களைப் படைத்தல்,[46] 'உயிர்கள் அனைத்தையும் காத்தல்,[47] 'அழித்தல் கடவுளாக விளங்குதல்' [48] 'தொன்மையாக உள்ள முதற்பொருளாக விளங்குதல்',[49] 'ஆலமரத்தின் கீழ் அமர்ந்தவராக விளங்குதல்,[50] போன்ற செய்திகள் காணப்படுகின்றன. பண்டைத் தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்களுள் வரும் இத்தகைய கருத்துகள் சைவ சித்தாந்தக் கோட்பாடுகளுக்கு அடிப்படையாகக் கருதத்தக்கனவாகும்.

மணிமேகலையில்தான் முதன் முதலாகச் 'சைவம்' என்ற சொல்லையும், 'சைவ சித்தாந்தக் கோட்பாட்டுக்குரிய முக்கிய மூலங்களையும் கண்டு கொள்ள முடிகிறது.

". . . . . இறைவன் ஈசன் என
நின்ற சைவ வாதிநேர் படுதலும்
பரசும்நின் தெய்வம் எப்படித் தென்ன
இருசுட ரோடிய மானன்ஐம் பூதமென்
றெட்டு வகையும் உயிரும் யாக் கையுமாய்க்
கட்டி நிற்போனும் கலையுருவினோனும்
படைத்துவிளை யாடும் பண்பி னோனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்
தன்னில் வேறு தானொன் றிலோனும்
அன்னோன் இறைவன் ஆகமென் றுரைத்தனன்."[51]

என்ற குறிப்பு மணிமேகலையில் வருகிறது. மணிமேகலைக் காலத்தில் தான் சைவ சமயத்திற்குக் கடவுள் 'ஈசன்' என்ற பெயரில் வழங்கப்பட்டமையும் இப்பாடல் வரிகளால் புலனாகின்றன.

இதற்கு அடுத்ததாகச் சைவ சித்தாந்த வரலாற்றில் திருமுறைகளுக்குத் தனிப்பெரும் சிறப்புண்டு. அவை, சித்தாந்தக் கோட்பாடுகளின் கருவூலமாக

விளங்குகின்றன. திருமுறைகளில் ஆங்காங்கு காணப்படும் உண்மைக் கருத்துகளைத் தொகுத்தும் விரித்தும் விளக்கியும் வெளிப்படுத்துவனவாகச் சைவ சித்தாந்தச் சாத்திரங்கள் விளங்குகின்றன. சைவ சித்தாந்தத்திற்குச் சித்தாந்த சாத்திரங்கள் இலக்கணம் வகுத்தன எனின், அவ்விலக்கணத்திற்கு இலக்கியமாகச் சைவத் திருமுறைகள் விளங்குகின்றன.[52] சைவ சித்தாந்தக் கோட்பாடுகளுக்குத் தெளிவான விளக்கமும் விரிவான செய்திகளும் திருவாசகத்தில் உள்ள அளவு தேவாரத்தில் இல்லை என்பர்.[53]

திருமுறைகளில் திருமந்திரம் முக்கிய இடம் வகிக்கிறது. இதனை டி.பி.சித்தலிங்கம்,

> "சைவ சித்தாந்தக் கருத்துகளை எடுத்துக் கூறியதும், ஆகமங்களின் இன்றியமையாமை, அவற்றின் உட்கிடக்கை ஆகியவற்றை எடுத்துரைப்பதும் திருமூலர் செய்த பெருந் தொண்டாகும்"[54]

என்று குறிப்பிடுகிறார். இதைப்போலவே பெரிய புராணமும் சைவ சித்தாந்தத்திற்கு ஓர் அடிப்படை இலக்கியமாக விளங்குகிறது. பெரிய புராணம் காட்டும் அடியார்களின் வாழ்க்கை பிற்காலத்தில் சைவ சித்தாந்த நெறியின் குறிக்கோளாக அமைந்தது என்று கூற இடமளிக்கிறது.

சாத்திர நூல்களுக்கு முன்னால் தோன்றியுள்ள ஒரு நூல் 'ஞானாமிர்தம்' என்பதாகும். இது கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வாகீச முனிவரால் அருளப் பெற்றதாகும். இந்நூல் சைவ சித்தாந்த வரலாற்றில் குறிப்பிடத் தகுந்த ஒரு நூலாகும். இது போலவே, சாத்திர நூல்களுக்குப் பின்னரும் சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளக்கும் நூல்கள் பல தோன்றியுள்ளன. அவற்றுள், சீகாழிச் சிற்றம்பலநாடிகள் அருளிய 'துகளறு போதம்', தத்துவப் பிரகாசரின் 'தத்துவப் பிரகாசம்' சிவாக்கிரயோகியின் 'சிவநெறிப் பிரகாசம்' ஆகியன குறிப்பிடத் தக்கனவாகும். இவற்றுள் தத்துவப் பிரகாசமானது, சரியை, கிரியை, யோகம் என்னும் முதல் மூன்று பாதங்களையும் விரித்துரைக்கும் ஒரே தமிழ் நூல் என்ற சிறப்புப் பெற்று விளங்குகிறது.[55]

### 1.1.8. சைவ சித்தாந்த நூல்கள்

சைவ சித்தாந்தத்தைப் பற்றி விளக்கிக் கூறும் நூல்களை வடமொழி நூல்கள், தமிழ் நூல்கள் என இரண்டாகப் பிரிக்கலாம். அவற்றுள் வடமொழி நூல்கள்

குறித்து அடுத்த இதழில் விரிவாகக் காண இருப்பதால் தமிழ் நூல்கள் குறித்து இங்குக் காணலாகிறது.

### 1.1.8.1. தமிழ் நூல்கள்

தமிழில் உள்ள சைவ சித்தாந்தம் கூறும் நூல்களைத் தோத்திர நூல்கள், சாத்திர நூல்கள் என இரண்டாகப் பகுத்துக் கூறுவது மரபாகும். தோத்திரங்களினால் புகழப் பெறுபவரும், சாத்திரங்களினால் ஆராய்ந்து உணர்த்தப் பெறுபவரும், இறைவனே என்பதாக அப்பர்,

> "தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே"[56]

என்று பாடுகின்றார். எனவே, தோத்திரம், சாத்திரம் என இரு வகைகளில் பகுத்துப்பார்க்கும் முறை தொன்றுதொட்டு வரும் ஒன்றாகும் என்பது விளங்குகிறது.

#### 1.1.8.1.1. தோத்திர நூல்கள்

தோத்திர நூல்களுள் திருமுறைகள் முக்கிய இடம் வகிக்கின்றன. கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை சிவனருட்செல்வர்கள் அருளிச்செய்தவை திருமுறைகள் ஆகும்.[57] இத்திரு முறைகள் பன்னிரண்டாகத் தொகுக்கப்பெற்றுள்ளன. அவை, அட்டவணை எண் : 1 இல் விளக்கப்பட்டுள்ளன. இப்பன்னிரு திருமுறைகளும் பொதுவாகத் தோத்திர நூல்கள் என்று வழங்கப் பெறுகின்றன என்றாலும், இவற்றுள், சாத்திரம், சரித்திரம் ஆகியவற்றையும் சேர்த்துத் தோத்திரம், சாத்திரம் சரித்திரம், எனப் பாகுபடுத்திச் சோ.ந. கந்தசாமி காட்டுவார்.

> "பன்னிரு திருமுறைகளின் பொருண்மையினை நுணுகி நோக்கின் அவை தோத்திரம், சாத்திரம், சரித்திரம் என்ற பாகுபாட்டில் அடைவு செய்வதற்குரியவை என்பது புலனாகும். பத்தாம் திருமுறை சைவ சித்தாந்தச் சாத்திரமாகத் திகழ்கிறது. பன்னிரண்டாம் திருமுறை, அடியார்களின் அருஞ் சாதனைகளை விரித்துக் கூறும் சரித்திரமாக விளங்குகிறது. எஞ்சிய பத்துத் திருமுறைகளும் இறைவனைப் பாடிப்பரவும் தோத்திரங்களாக ஒளிர்வன. இங்ஙனம் பாகுபடுத்துவன ஒரு பொதுவான வரையறையே ஆகும்."[58]

என்று அவர் கூறும் கூற்று இங்கு நோக்கற்பாலதாகும்.

அட்டவணை : 1

## பன்னிரு திருமுறைகள்

| வ. எண் | திருமுறை | பாடிய பதிகங்கள் பிரபந்தம் | எண்ணிக்கை | திருமுறை ஆசிரியர் | காலம் (கி.பி) |
|---|---|---|---|---|---|
| 1 | 1,2,3 திருக்கடைக்காப்பு | 384 | 4158 | திருஞானசம்பந்தர் | 7ஆம் நூற். |
| 2 | 4,5,6 தேவாரம் | 312 | 3066 | திருநாவுக்கரசர் | 576 - 656 |
| 3 | 7. திருப்பாட்டு | 100 | 1026 | சுந்தரர் | 8ஆம்நூற். முற்பகுதி |
| 4 | 8. திருவாசகம் | 51 | 658 | மாணிக்கவாசகர் | 8ஆம்நூற். பிற்பகுதி |
| | 8. திருச்சிற்றம்பலக்கோவையார் | - | 400 | " | |
| 5. | 9. திருவிசைப்பா | 4 | 45 | திருமாளிகைத்தேவர் | 9ஆம்நூற். பிற்பகுதியும் 10ஆம்நூற். முற்பகுதியும் |
| 6. | 9. திருவிசைப்பா | 3 | 34 | சேந்தனார் | " |
| | 9 திருவிசைப்பா | 1 | 13 | " | " |
| 7. | 3. திருவிசைப்பா | 10 | 105 | கருவூர்த்தேவர் | 10ஆம் நூற். பிற்பகுதியும் 11ஆம் நூற். முற்பகுதியும் |
| 8. | 9. திருவிசைப்பா | 2 | 12 (2+10) | பூந்துருத்தி நம்பி காடவ நம்பி | " |
| 9. | 9. திருவிசைப்பா | 1 | 10 | கண்டராதித்தர் | 10 ஆம் நூற். பிற்பகுதி |
| 10. | 9. திருவிசைப்பா | 1 | 10 | வேணாட்டடிகள் | 10 ஆம் நூற். |
| 11. | 9. திருவிசைப்பா | 4 | 42 | திருவாலியமுதனார் | 10 ஆம் நூற். |
| 12. | 9. திருவிசைப்பா | 2 | 22 | புருடோத்தம நம்பி | 10 ஆம் நூற். |
| 13. | 9. திருவிசைப்பா | 1 | 10 | சேதிராயர் | 11 ஆம் நூற். முற்பகுதி |
| 14. | 10. திருமந்திரமாலை | - | 3047 | திருமூலர் | 500 |
| 15. | 11. பிரபந்தமாலை | 1 | 1 | திருவாலவாயுடையார் | 8,9, ஆம் நூற். |
| 16. | 11. பிரபந்தமாலை | 4 | 143 | காரைக்காலம்மையார் | 5, 6, ஆம் நூற். |
| 17. | 11. பிரபந்தமாலை | 1 | 24 | ஐயடிகள்காடவர்கோன் | 7 ஆம் நூற். |
| 18. | 11. பிரபந்தமாலை | 3 | 130+1 | சேரமான் பெருமாள் நாயனார் | 8 ஆம் நூற். |
| 19. | 11. பிரபந்தமாலை | 10 | 199 | நக்கீர தேவநாயனார் | 600 |
| 20. | 11. பிரபந்தமாலை | 1 | 1 | கல்லாடதேவநாயனார் | 650 |
| 21. | 11. பிரபந்தமாலை | 3 | 157 | கபில தேவ நாயனார் | 650 |
| 22. | 11. பிரபந்தமாலை | 1 | 100 | பரணதேவ நாயனார் | 650 |
| 23. | 11. பிரபந்தமாலை | 1 | 30 | இளம்பெருமானடிகள் | 9 ஆம் நூற். |
| 24. | 11. பிரபந்தமாலை | 1 | 23 | அதிராவடிகள் | 9 ஆம் நூற். |
| 25. | 11. பிரபந்தமாலை | 5 | 210 | பட்டினத்துப்பிள்ளையார் | 875 - 950 |
| 26. | 11. பிரபந்தமாலை | 10 | 383 | நம்பியாண்டார் நம்பி | 970 - 1040 |
| 27. | 12. திருத்தொண்டர் புராணம் | 1 | 4286 | சேக்கிழார் | 12 ஆம் நூற். பிற்பகுதி |
| . | மொத்தப்பாடல்கள் | | 18,346 | | |

**ஆதாரம்** : *கந்தசாமி. சோ.ந., திருமுறை இலக்கியம், பக். 3-5.*

பன்னிரு திருமுறைகளைத் தவிரவும், குமரகுருபரர், அபிராமி பட்டர், பாம்பன் சுவாமிகள், இராமலிங்க அடிகள், ஆகியோர்கள் அருளிய பாடல்களும் தோத்திரப் பாடல்களாகக் கருதப் படுவனவற்றுள் முக்கியமானவையாகும்.

### 1.1.8.1.2. சாத்திர நூல்கள்

மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாச்சாரியார் ஆகிய நால்வரும் சைவ சந்தானாசாரியார் எனப்பெறுவர். மெய்கண்ட சாத்திரங்கள் அல்லது சித்தாந்த சாத்திரங்கள் பதினான்காகும். இப்பதினான்கனுள் மறைஞான சம்பந்தரைத் தவிர ஏனைய மூவர் அருளிய நூல்கள் பதினொன்றாகும். அல்லது மரபு வழிப்பார்த்தால் பன்னிரண்டாகும்.[59] மறைஞான சம்பந்தர் நூல் எதுவும் எழுதியதாகத் தெரியவில்லை.[60] இப்பதினான்கு சாத்திரங்களும் அட்டவணை எண். 2 இல் காடடபபெற்றுளளன. இவற்றுள் சிவப்பிரகாசம் தொடங்கி உள்ள எட்டு நூல்களும், உமாபதி சிவாசாரியார் அருளியவை ஆகும். இவ்வெட்டு நூல்களையும் சைவர்கள் 'சித்தாந்த அட்டகம்' என்று போற்றி வருகிறார்கள். இச்சித்தாந்த அட்டகத்தினுள் ஒன்றாகிய 'உண்மை நெறி விளக்கம்' என்ற நூல் உமாபதி சிவாச்சாரியரால் எழுதப் பெறாமல் சீகாழித் தத்துவநாதரால் அருளிச் செய்யப்பட்டது என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.[61]

சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கைப் போலவே நமக்குக் கிடைத்துள்ள வேறு பதினான்கு நூல்கள் பண்டாரச் சாத்திரங்கள் எனப்பெறும். அவை, அம்பலவாண தேசிகர் அருளிய தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாயநிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசய மாலை, நமச்சிவாயம் ஆகிய பத்து நூல்களும், தட்சிணாமூர்த்தி தேசிகர் அருளிய தசகாரிய மாலை, உபதேசப் பஃறொடை ஆகிய இரண்டு நூல்களும், சுவாமிநாத தேசிகர் அருளிய தசகாரியம் என்ற நூலும், வேலப்ப தேசிகர் அருளிய பஞ்சாக்கரப் பஃறொடை என்ற நூலும் ஆகப் பதினான்கு நூல்களாகும்.[62]

### 1.1.9. சைவ சித்தாந்தக் கோட்பாடுகள்

சுப்பிரபேதாகமமத்தின் ஞானபாதத்தை இவ்வாய்வேடு ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ளதால் சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் பற்றிக் காண்பது அவசியமாகிறது.

அட்டவணை : 2

## பதினான்கு சாத்திரங்கள்

| வ. எண் | சாத்திரங்கள் | ஆசிரியர் | பாடல்களின் எண்ணிக்கை | காலம் (கி.பி) |
|---|---|---|---|---|
| 1. | திருவுந்தியார் | திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார் | 45 | 12 ஆம் நூற். |
| 2. | திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் | 100 | 12 ஆம் நூற். |
| 3. | சிவஞான போதம் | மெய்கண்டார் | 12சூத்திரங்கள் 81வெண்பாக்கள் | 13 ஆம் நூற். முற்பகுதி |
| 4. | சிவஞான சித்தியார் | அருணந்தி சிவாசாரியார் | 629 (பரபக்கம் 301 சுபக்கம் 328) | 13 ஆம் நூற். |
| 5. | இருபா இருபஃது | " | 20 | " |
| 6. | உண்மை விளக்கம் | திருவதிகை மனவாசகங் கடந்தார் | 63 | 13 ஆம் நூற். |
| 7. | சிவப்பிரகாசம் | உமாபதி சிவாச்சாரியார் | 100 | 14 ஆம் நூற். |
| 8. | திருவருட் பயன் | " | 100 | " |
| 9. | வினாவெண்பா | " | 13 | " |
| 10. | போற்றிப் பஃறொடை | " | 1 | " |
| 11. | கொடிக்கவி | " | 4 | " |
| 12. | நெஞ்சு விடுதூது | " | 129 கண்ணிகள் | " |
| 13. | உண்மை நெறிவிளக்கம் | " | 6 | " |
| 14. | சங்கற்பநிராகரணம் | " | 20 | " |

ஆதாரம் : விமலானந்தம். மது.ச., தமிழ் இலக்கிய வரலாறு பக். 235 - 239

சைவ சித்தாந்தத்தைப் பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் என நான்கு வகையாகப் பிரித்து மெய்கண்டார் விளக்குவார். பதி, பசு, பாசம் என்னும் மூன்றும் உள்ள பொருள்களே என்பது பிரமாண இயலில் நிறுவப்படும். பின்னர் அவற்றின் இயல்புகள் (பொது, சிறப்பு) இலக்கண இயலில் விரித்துரைக்கப்படும். ஆணவ அழுக்குடைய உயிர் தூய்மையடைந்து இறையைச் சேர உரிய சாதனங்கள் இவை என்பது சாதனவியலில் விளக்கப்பெறும். அவற்றால் பெறும் பயன்கள் இவை என்பன பயனியலில் விளக்கப்பெறும்.

சித்தாந்த நூல்கள் எல்லாப் பொருள்களையும் பதி, பசு, பாசம் என்ற மூன்றில் அடக்கிக் காட்டுகின்றன. இவை முறையே இறை, உயிர், தளை எனப்படும். இறை ஒன்றே ; உயிர்கள் எண்ணிறந்தன ; தளை ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று என்பதே சைவ சித்தாந்தத்தின் அடிப்படையாகும்.

### 1.1.9.1. முப்பொருள் உண்மை

இல்லாத பொருள் தோன்றாது, தோன்றியுள்ள பொருள் அழியாது என்பதும், ஒரு பொருளுக்கு ஒரு குறிப்பிட்ட தன்மைதான் இருக்க முடியும் என்பதுமாகிய இரு முடிவுகளையும் அடிப்படையாகக் கொண்டு இறை, உயிர், தளை என்பன உள்ள பொருள்களே என்றும், வெவ்வேறு தன்மை உள்ளதால் இவை தனித்தனிப் பொருள்கள் என்றும், சைவ சித்தாந்தம் விளக்குகிறது. இம்மூன்று பொருள்களுக்கும் தோற்றம் இல்லை, முடிவும் இல்லை. இதனைத் திருமூலரின் திருமந்திரம்,

> "பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
> பதியினைப் போல்பசு பாசம் அநாதி"[63]

என்று தெளிவுபடுத்துகிறது. எனவே, இறை என்று உண்டோ, அன்றே உயிரும் உண்டு, உயிர்களைப் பிணித்துள்ள தளையும் உண்டு என்பது சைவ சித்தாந்தக் கோட்பாடாகும்.

### 1.1.9.2. இறைக்கோட்பாடு

இறை உண்மை, சத்காரியவாதம், இறை ஒன்றே, இறையின் சிறப்பு, சங்கார காரணனே இறைவன், நிமித்த காரணன் இறைவன், இறை உயிர்தளைகளின் தொடர்பு, இறையும் சக்தியும், இறைவனின் இயல்பு ஆகிய தலைப்புகளில் இறைக்கோட்பாடு விளக்கப் பெறுகிறது.

### 1.1.9.2.1 இறை உண்மை

இறைவன் ஒருவன் உளன் என்னும் இறை உண்மையை அனுமான அளவையால் சைவ சித்தாந்தம் உணர்த்துகிறது. மேலும் இதனைச் சத்காரிய வாதத்தாலும் உரைக்கப்படுவதும் உண்டு.

### 1.1.9.2.2. சத்காரியவாதம்

உள்ளதே தோன்றும், இல்லது தோன்றாது என்பது சத்காரிய வாதமாகும். இதனை வ. ஆ. தேவசேனாபதி, ''காரியம் அல்லது விளைவு காரணத்தில் முன்னரே உள்ளது என்னும் பேச்சு சத்காரியவாதம் எனப்பெறும்.''[64] என்பார். இதனால் உள்ளது என்றும் அழிவதில்லை என்பதும் பெறப்படுகிறது.

உலகம் என்பது காரணப் பிரபஞ்சம், காரியப் பிரபஞ்சம் என இருவகைப்படும். காரணப் பிரபஞ்சம் என்பது மண் போன்றது. காரியப் பிரபஞ்சம் என்பது குடம் போன்றது. மண்ணிலிருந்து குடத்தைக் குயவன் தோற்றுவிப்பது போல மாயை என்ற காரணப் பிரபஞ்சத்திலிருந்து உலகம் என்ற காரியப் பிரபஞ்சத்தை இறைவன் தோற்றுவிக்கின்றான். மண்ணிலிருந்து குடம் தானே தோன்றாது. அதற்குச் செய்பவன் ஆகிய குயவன் ஒருவன் வேண்டும். அதுபோல மாயையிலிருந்து உலகம் தானே தோன்றாது. அதற்குச் செய்பவனாகிய இறைவன் ஒருவன் வேண்டும். இவ்வாறு காரண காரிய முறையில் உலகிற்குச் செய்பவன் (கருத்தா) ஒருவன் உண்டு என்று சைவ சித்தாந்தம் விளக்குகிறது.

### 1.1.9.2.3. இறை ஒன்றே

வேதத்தின் கரும காண்டத்தில் பல கடவுளர் பேசப்படுவதால் இறைவன் பலர் என்று கருத இடம் அளிக்கிறது. இக்கருத்தைச் சைவ சித்தாந்தம் ஏற்றுக் கொள்வதில்லை. அயன், அரி, அரன் ஆகிய மும்மூர்த்திகளுள் அரனே சிவன் என்ற கருத்தையும் சைவ சித்தாந்தம் ஏற்கவில்லை. சிவன் முழுமுதற்கடவுள் என்று குறிக்கப் பெறுவதால் இறை ஒன்றே என்பது சித்தாந்தத்தின் முடிந்த முடிவாகும்.

### 1.1.9.2.4. இறைவனின் சிறப்பு

இறை, உயிர் தளை மூன்றும் உள்ள பொருள்கள் என்பதால் மூன்றும் சமம் என்று கொள்ள ஏது இல்லை. இறை என்பது அறிவே வடிவானது. பேரறிவும் பேராற்றலும் உடையது. எல்லாப் பொருள்களையும் தன் விருப்பப்படி நடத்துவது

ஆகும். உயிர் என்பது சிற்றறிவுடையது, உணர்த்த உணர்வது, மயங்கித் தெளிவது ஆகும். தளை என்பது அறிவற்றது ஆகும். எனவே, இவை மூன்றும் ஏற்றத்தாழ்வு உடையவை ஆகும்.

### 1.1.9.2.5. சங்கார காரணனே இறைவன்

இறைவனைச் சங்கார காரணன் என்று குறிப்பது மரபு. படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழில்களையும் மூவர் செய்கின்றனர். இவர்களுள் படைப்பவன் ஏனை இருவரையும் படைக்கின்றவன் ஆவான். காப்பவன் ஏனை இருவரையும் காப்பவன் ஆவான். அழிப்பவன் ஏனை இருவரையும் அழிப்பவன் ஆவான். இதனால் அழித்தல் தொழில் செய்யும் சங்காரக் கடவுள் அழிக்கும் காலத்தில் எல்லாவற்றோடும் ஏனை இருவரையும் அழித்துத்தான் அழியாது நின்று உலகைப் படைப்பான் என்பது பெறப்படுகிறது. எனவே, சங்கார காரணனே இறைவன் என்ற கொள்கையைச் சைவ சித்தாந்தம் குறிக்கிறது. இதனை ''அழித்தல் தொழிலே படைத்தலுக்குக் காரணமாகிறது'' எனும் விளக்கங்களின் அடிப்படையில் ஒடுக்கம் செய்தலாகிய சங்காரத் தொழிலை உடைய பரம் பொருளைத் தலைமைப் பொருளாக விவரிக்கும்.''[65] என்று நல்லூர் சா. சரவணன் குறிப்பிடுகிறார்.

### 1.1.9.2.6. நிமித்த காரணன் இறைவன்

இறை, என்பது சித்துப் பொருள். மாயை என்பது சடப்பொருள். நிலத்தில் விழுந்த விதையில் முளை உண்டாகிறது. இறை நிலம் போன்றது ஆகும். மாயை விதை போன்றதாகும். விதையிலிருந்துதான் முளை தோன்றும். எனினும் நிலத்தின் ஆதாரம் இன்றி அது இயலாது. இவ்வாறே மாயையிலிருந்து உலகம் தோன்றினும் இறைவன் செயலின்றி அது நிகழாது. எனவே உலகிற்கு நிமித்தகாரணன் இறைவனே ஆவான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும்.

### 1.1.9.2.7. இறை உயிர் தளைகளின் தொடர்பு

உயிர்களையும், பிறவற்றையும் குறிக்கும் பொதுச் சொல்லே உலகம் என்பதாகும். அறிவுடைய உயிர்கள் சேதனப் பிரபஞ்சம் எனப்படும். அறிவற்ற பொருள்கள் அசேதனப் பிரபஞ்சம் எனப்படும். இறைவனுக்கும் மற்ற இருவகைப் பிரபஞ்சத்திற்கும் உள்ள தொடர்பை விளக்குகிறது சைவ சித்தாந்தம். இத்தகைய தொடர்பு பொன்னும் அணிகலன்களும் போன்றது எனில்

அணிகலன்களுக்கு உள்ள குறைகள் பொன்னிற்கும் வருவது போல, உலகத்திற்கு வரும் குறைகள் எல்லாம் இறைவனுக்கும் வரும் தன்மை உடையதாகும். எனவே இந்த அபேதவாதம் பொருந்தாது. ஒளியும் இருளும் போன்றது எனின் ஒளியும் இருளும் ஒன்றுக்கு ஒன்று பகைப் பொருளாதல் போல இறைவனும் உலகமும் பகைப் பொருளாதல் வேண்டுமாதலால் இந்தப் பேதவாதமும் பொருந்தாது. சொல்லும் பொருளும் வேறு வேறல்லாது ஒன்றல்ல ஆதலின் பேதாபேதம் என்பதும் பொருந்தாது. எனவே, இம்மூன்றும் தன்னுள் காணப்பட்டு நிற்கும் அத்துவைதத் தொடர்பே இறைவனுக்கும் உலகத்திற்கும் உள்ள தொடர்பு என்பது சைவ சித்தாந்தம் ஆகும். இத்தன்மையை ''அவையே தானேயாய்''[66] என்று மெய்கண்டார் குறிப்பிடுவார்.

### *1.1.9.2.8. சிவமும் சத்தியும்*

இறைவன் ஒருவன் தான். அவன் எண்ணிறந்த உயிர்களிலும் எல்லாப் பொருள்களிலும் கலந்து நிற்கிறான். எங்கும் பரவி நிற்கும் சத்தியை அவன் உடையவனாக இருக்கிறான். இதனை அப்பரடிகள்,

> ''விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
> மறைய நின்றுளன் மாமணிச் சோதியன்
> உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
> முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே''[67]

என்று குறிப்பிடுவதும் இங்கு நோக்கத் தக்கதாகும்.

கதிரவனும் கதிரும் போலச் சிவமும் சக்தியும் ஒன்றே ஆகும். இவ்வாறு ஒரு பொருள் இரண்டு கூறாகக் காணப்பட்டு இயைந்து நிற்றல் 'தாதான்மிய சம்பந்தம்' எனப்படும். சிவம் குணிப்பொருள், சக்தி குணப்பொருள். குணி செலுத்தியபடியே குணம் செல்லும். சிவத்தின் வழியே சத்தி செல்லும், இறைவன் அயனாய் நின்று படைக்கும்பொழுது சக்தி திருமகளாகவும், அரனாய் நின்று அழிக்கும் பொழுது, சக்தி உமையாகவும் நிற்பாள். இது குறித்து வ.ஆ. தேவசேனாபதி,

> ''சிவம், சக்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுவரன், உருத்திரன், மால், அயன் என்னும் ஒன்பது வடிவ வேறுபாடுகளுடன் ஒன்றாயுள்ள இறைவனே ஐந்தொழில்களையும் செய்வான். 'நவந்தரும் பேதம் ஏகநாதனே நடிப்பன்' என்பது சித்தியார்.

இவ்வொன்பதனுள் சிவம், நாதம், சதாசிவம், ஈசன், அரன், அரி, அயன் என்னும் ஏழும் சிவ பேதங்கள். சக்தி, விந்து என்பவை சக்தி பேதங்கள். இவை ஒன்றின் ஒன்று தோன்றுதல் பற்றி ஒன்பது என வைக்கப்பட்டன. ஏனை, சதாசிவம், ஈசன், அரன், அரி, அயன் என்னும் ஐந்து சிவ பேதங்களுக்கும் சக்தி பேதங்கள் முறையே மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி, என உரைக்கப்படுகின்றன. ஆதலினால் சிவபேதங்கள் ஏழு, சத்தி பேதங்கள் ஏழு என்பதே சித்தாந்த சாத்திரத்தின் துணிபு''[68]

என்று கூறும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

இவ்வொன்பது சிவ வடிவ வேறுபாடுகளுக்கு இயைய அவன் ஆற்றலும் ஒன்பது வடிவங்கள் ஆகின்றன. ''எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பாள்''[69] என்று சிவஞான சித்தியார் கூறுகிறது. ஆகப் பிரபஞ்சம் அனைத்தும் சக்தி சிவமயம் என்பது சித்தாந்தம் ஆகும்.

### 1.1.9.2.9. இறைவனின் இயல்பு

இறைவனின் இயல்பைப் பொது சிறப்பு என இரண்டாகப் பிரித்துக் கூறுவது மரபாகும். இறை தன்னையே நோக்கி நிற்கும் பொழுது உள்ள இயல்பு பற்றிக் கூறுவது சொரூப இலக்கணம் எனப்படும். உயிர்களை நோக்கி நிற்கும் இறையிடம் காணப்படும் இயல்புகள் பொது இயல்பு அல்லது தடத்த இலக்கணம் எனப்படும்.

### 1.1.9.2.9.1. சொரூப இலக்கணம்

இறையின் தன்னியல்பை உபநிடதங்கள் சத்து சித்து ஆனந்தம் என்னும் மூன்றில் அடக்கிக் கூறும் 'சத்து' என்பதற்கு என்றும் மாற்றமின்றி ஒரு நிலையாய் உள்ளது என்பது பொருளாகும். 'சித்து' என்பதற்கு எல்லாவற்றையும் எப்போதும் தானே அறியும் என்பது பொருளாகும். 'ஆனந்தம்' என்பதற்கு 'எல்லையற்ற இன்பம்' என்பது பொருளாகும். இம்மூன்றும் சேர்ந்தே 'சச்சிதானந்தம்' எனப்படும். இம்மூன்றைச் சிவாகமங்கள் எட்டாக விரித்துக் கூறுகின்றன. அவை 1. தன் வயத்தனாதல், 2. தூய உடம்பினாதல், 3. இயற்கை உணர்வினனாதல், 4. முற்று முணர்தல், 5. இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், 6. பேரருளுடைமை, 7. முடிவிலாற்றலுடைமை 8. வரம்பில் இன்பமுடைமை என்பனவாகும். எனவே,

ஒன்றாக இருப்பது கால இடங்களால் அளவு படுத்தப்படாமல் இருப்பது அசைவற்றிருப்பது காட்சிக்கும் கருத்துக்கும் சொல்லுக்கும் அப்பாற்பட்டிருப்பது என்பன தன்னையே நோக்கி நிற்கும் நிலையில் இறையிடம் காணப்படும் சொரூப இலக்கணம் ஆகும். இந்நிலையில் இறை சிவம் எனப்படும்.

### 1.1.9.2.9.2. தடத்த இலக்கணம்

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்பன இறையின் ஐந்து தொழில்கள் ஆகும். இவற்றை வடமொழியில் 'பஞ்ச கிருத்தியம்' என்று கூறப்படுகிறது. இவ்வைந்தும் உயிர் நோக்கி உள்ளபோது இறைவனின் இயல்புகள் ஆதலால் இவை இறையின் தடத்த இலக்கணங்கள் எனப்படுகின்றன.

இவற்றுள் உயிர்கள் வினை தீர்த்தல் பொருட்டு உலகம் படைக்கப்படுவது. படைத்தல் எனப்படும். அவை வினை நுகரும் பொருட்டு உலகம் காக்கப்படுவது காத்தல் எனப்படும். அவை இளைப்பு நீங்கும் பொருட்டு உலகம் அழிக்கப்படுவது அழித்தல் எனப்படும். இம்மூன்றும் உலகத்தின் மீது செய்யப்படுவனவாகும். உயிர்கள் மலபரிபாகம் அடைதற்பொருட்டு அவை தன்னை அறிய முடியாமல் அவற்றின் அறிவை மறைப்பது மறைத்தல் எனப்படும். உயிர்களின் இயல்பான ஆணவத்தைத் தூண்டி இச்செயல் நிகழ்த்தப்படுகிறது. ஆணவம் செயல்படச் செயல்படத் தேய்ந்து தேய்ந்து மெலியும். அப்பொழுது உயிர்களின் அறிவு மறைப்பு நீங்கும். ஆணவம் மெலிந்த உயிர்களுக்கு இறை தன்னையும் அவற்றையும் உணர்த்திப் பகையாகிய தளையை நீக்கி உறவாகிய தன்னை அடையுமாறு செய்வது பேரின்பம் தருதல் அருளல் எனப்படும். இதனைப்

"பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடையமுத்தி"[70]

என்று அருணந்தி சிவாசாரியார் விளக்குவார். இவ்விரண்டும் உயிர்கள் மேல் செய்யப்படுவனவாகும். இறைவன் மறைத்தலை மகேசுவரனாய் நின்று செய்யும் பொழுது சக்தி மகேசுவரி என நிற்பாள். சதாசிவனாய் நின்று அருளைச் செய்யும்பொழுது சத்தி மனோன்மனியாய் நிற்பாள்.

### 1.1.9.2.10 இறைவனின் திருமேனிகள்

சொரூப நிலையில் தனக்கென உருவமும், தொழிலும் பெயரும், இல்லாத இறை, தடத்த நிலையில் பல உருவங்களும் பல தொழில்களும், பல பெயர்களும்

பெற்று விளங்கும். எனவே, தடத்த நிலையில் உள்ள இறைக்கு அருவம், அருவுருவம், உருவம், என மூவகைத் திருமேனிகள் சொல்லப்பட்டுள்ளன. இவற்றுள் அருவம் என்பது கண்ணுக்குப் புலனாகாது. அருவுருவம் என்பது கண்ணுக்குப் புலனாயினும் ஒளிப் பிழம்பாய் நிற்பதன்றிக் கைகளால் முதலியன இல்லாதது. உருவம் என்பது கண்ணுக்குப் புலனாவது. இத்திருமேனிகள் முறையே இலயநிலை, போக நிலை, அதிகார நிலை எனக் கூறப்பெறும். இந்நிலைகளில் இறை முறையே சிவன், சதாசிவன், மகேசுவரன் என்றும் பெயர்கள் பெற்று விளங்கும்.

### 1.1.9.2.11. இறையறிதல்

உயிர்கள் தம்மைத்தாம் அறியும் அறிவு பசு ஞானம் எனப்படும். அகப்புறக் கருவிகளால் அறியும் அறிவு பாசஞானம் எனப்படும். இறைவன் அருளைப் பற்றி நின்று அறியும் அறிவு பதி ஞானம் எனப்படும். பதி ஞானத்தாலேதான் இறைவனை அறியமுடியும் என்பது சைவ சித்தாந்தக் கொள்கையாகும். ''அவனருளாலே அவன் தாள் வணங்கி''[70] என்ற மணிவாசகப் பெருமானின் வாக்கையும் இங்கு நோக்கற்பாலதாகும்.

### 1.1.9.3. உயிர்க்கோட்பாடு

சித்தாந்த வழக்கில் உயிரைப் பசு, சிற்றுயிர், ஆன்மா, ஜீவான்மா, ஜீவன் ஆகிய பெயர்களில் சுட்டுவர்[71] உலகில் அறிவாய் நிற்பது எதுவோ அதுவே உயிர் என்பதாகும்.

### 1.1.9.3.1. உயிர் - விளக்கம்

எல்லாவற்றையும் முழுதும் அறிந்து அறிவிக்கும் பேரறிவுப் பொருளை 'சித்து' என்றும் அறிவில்லாத சடப்பொருள் 'அசித்து' என்றும். ஒன்வொன்றாக எதையும் அறியும் சிற்றறிவைச் சதசத்து என்றும் வகைப்படுத்துவர்[72]. இவற்றுள் 'சதசித்து' என்பதே உயிராகும் என்பது சித்தாந்திகளின் முடிவாகும்[73].

### 1.1.9.3.2. உயிர்களின் உண்மை இயல்பு

உயிர் அறிவுடைப் பொருளாதலின் இறைவனைப் போலவே உயிரும் இச்சை, கிரியை ஆகியன உடையதாகும். இறைவனுடை இச்சை, கிரியை, ஞானம், ஆகியன ஆணவத்தால் தடுக்கப்படாமல் என்றும் விளங்கியே

நிற்கின்றன. உயிர்களின் இச்சை, கிரியை, ஞானம் ஆகியன ஆணவத்தால் மறைக்கப்பட்டு நிற்கின்றன.

இறைவனோடு உயிர் அத்துவைத் தொடர்பு கொண்டதாக உள்ளது என்பது சித்தாந்த மரபாகும்[74]. 'சார்ந்த தன் வண்ணமாதல்' உயிர்களின் இயல்பாகும். அதாவது உயிர் எப்பொருளைச் சார்கின்றதோ அப்பொருளின் தன்மையே தன் தன்மையாகக் கொள்ளும்.

ஆக இம்மூன்றும் உயிர்களின் உண்மை இயல்பான சொரூப இலக்கணம் ஆகும்.

### 1.1.9.3.3. உயிர்களின் பொது இயல்பு

இயல்பாகவே, பாசத்தால் கட்டுண்டு கிடத்தல் உயிர்களின் பொது இயல்பாகும். இப்பொது இயல்பினை 'அவத்தை' என்று வடமொழியில் குறிப்பதுண்டு. இது காரண அவத்தை, காரிய அவத்தை என இரு வகைப்படும்.

#### 1.1.9.3.3.1. காரண அவத்தை

காரண அவத்தைகள், கேவலம், சகலம், சுத்தம் என மூன்றாகும். உடல், பொறி முதலியன ஏதுமின்றி உயிர் அறியாமை இருளில் செயலற்றிருப்பது 'கேவலாவத்தை' எனப்படும். உடல், பொறி முதலியவற்றைப் பெற்று வினைகளை ஈட்டியும் நுகர்ந்தும் வருவது 'சகலாவத்தை' எனப்படும். இவை இரண்டும் அற்று இறையைச் சார்ந்து என்றும் ஒரு நிலையாய் இருப்பது 'சுத்தாவத்தை' எனப்படும்.

#### 1.1.9.3.3.2. காரிய அவத்தை

உயிர் உடம்போடு கூடியபொழுது ஐந்து நிலைகளில் உள்ளது. அவை, சாக்கிரம் (நனவு) சொப்பனம் (கனவு) சுழுத்தி (உறக்கம்), துரியம் (பேருறக்கம்), துரியாதீதம் (உயிர்ப்படக்கம்) என்பனவாகும்[75].

ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, பேச்சு கொடை, நடை, போக்கு (மலசலம் விடல்) இன்பம் (சுக்கில சுரோணிதம் விடல்) ஆகிய வசனாதி விடயங்கள் ஐந்து, பிராணன், அபாணன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன், ஆகிய வாயுக்கள் பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று என்னும் முப்பத்தைந்து

கருவிகளோடு உயிர் நனவு அல்லது விழிப்பு நிலையில் கூடி நிற்கும் அனுபவ நிலை 'சாக்கிரம்' எனப்படும். புருவத்தின் நடுப்பகுதி இதற்குரிய இடமாகும்.

இந்த முப்பத்தைந்தில் ஞானேந்திரியம், கன்மேந்திரியம் நீங்கலாக உள்ள ஏனைய இருபத்தைந்து கருவிகளோடு உயிர் கூடி நிற்கும் அனுபவ நிலை 'சொப்பனம்' எனப்படும்.

பிராணன், சித்தம், புருடன் ஆகிய மூன்று கருவிகளோடு கூடி நிற்கும், அனுபவ நிலை 'சுழுத்தி' எனப்படும். இதற்குரிய இடம் இதயமாகும்.

பிராணன், புருடன் ஆகிய இரண்டு கருவிகளோடு கூடி நிற்கும் அனுபவ நிலை 'துரியம்' எனப்படும். இதற்குரிய இடம் உந்தி ஆகும்.

புருடன் ஒன்றோடு மட்டுமே கூடிய அனுபவ நிலை 'துரியா தீதம்' எனப்படும். இதற்குரிய இடம் மூலாதாரம் ஆகும்.

இவ்வாறு உயிர் பலநிலைகளை அடைவது மலத்தொடர்பால் ஆதலின் இவை யாவும் அதனின் பொது இயல்பான தடத்த இலக்கணம் ஆகும். இதனை வ.ஆ. தேவசேனாபதி.

> ''அமைச்சர் முதலாயினோர் சூழ உலாப்போந்த மன்னன் அரண்மனைக்குத் திரும்பும்போது அவரவர்களை அங்கங்கே விட்டுவிட்டுத் தான் மட்டும் அந்தப்புரத்திற்கு வருவது போல, ஆன்மாவும் நெற்றியிலிருந்து கீழே மூலாதாரத்திற்குச் செல்வது மீண்டும் மூலாதாரத்தினின்று மேலே வருதல் போன்ற நிலைகள் இங்கே குறிக்கப்பெறுகின்றன.''[76]

என்று கூறுவது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

### 1.1.9.3.4. உயிர்களின் வகைகள்

உயிர்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும். அழுக்கு என்பதன் பொருளாகிய ஆணவம், கன்மம், மாயை என மூவகை மலங்களுள் ஆணவ மலம் மட்டும் உடையவர் 'விஞ்ஞான கலர்' எனப்படுவர். ஆணவம், கன்மம் என்னும் இரு மலங்கள் உடையவர் 'பிரளயாகலர்' எனப்படுவர். மும்மலங்களும் உடையவர் 'சகலர்' எனப்படுவர்.

### 1.1.9.4. தளைக் கோட்பாடு

உயிர் இறையைச் சேரவொட்டாமல் இருக்கும் தடைக்குத் தளை என்று பெயராகும். தளையைக் குறிக்கும் வடசொல்லாகிய பாசம் என்பதற்குக் 'கட்டு' என்பது பொருளாகும். தளை, பாசம், மலம் என்பன ஒருபொருள் சொற்களாகும். ஆணவம், கன்மம், மாயை, எனத்தளை மூன்றாகும். இவற்றுள், மாயையின் காரியங்களாகிய 'மாயேயம்', மலங்களைத் தொழிற்படுத்தும். இறைவன் சக்தியாகிய 'திரோதானம்' ஆகிய இரண்டையும் சேர்த்துத் தளையினை ஐந்து என்று கொள்வதுமுண்டு.

### 1.1.9.4.1. ஆணவக்கோட்பாடு

உயிருக்கு இறையைக் காட்டாது மறைக்கும் ஒன்று ஆணவம் என்பதாகும். இதனை வ.ஆ. தேவசேனாபதி,

> "உயிர்களுக்கு அறிவு, செயல் ஆற்றல் விழைவு, (உணர்ச்சி இச்சை) இயல்பாக உண்டு. ஆயினும், இவை குறைவின்றி வெளிப்படாமல் தடைப்பட்டே காணப்படுகின்றன. இவற்றைத் தடுத்து நிற்பதே ஆவணம் என்பது சித்தாந்தம்"[77]

என்று குறிப்பிடுவார். பசுத்துவம், பசு, நீஹாரம், ம்ருத்யு, மூர்ச்சை, மலம், அஞ்சனம், அவித்யை, ஆவிருத்தி, ருக், க்லானி, பாவம், மூலம், க்ஷயம், என ஆணவம் வேறு பெயர்களாலும் குறிப்பிடப்படும்.[78] செம்பில் களிம்பிருப்பது போன்று உயிருக்கு அநாதியாகவே அடைந்த இயற்கைக் குற்றம் ஆணவம் என்பதாகும். ஆணவத்தின் உண்மை பொது இயல்புகளை வ.ஆ. தேவசேனாபதி,

> "ஆணவத்திற்கு ஆவாரக சக்தி என்றும், அதோநியாமிகா சக்தி என்றும் இரு வகையான சக்திகள் உண்டென்பர். உயிர்களை முற்றிலும் மறைத்து நிற்பது ஆவாரக சக்தி. இது ஆணவத்தின் இயல்பு - ஸ்வரூப லக்ஷணம். பிறவற்றோடு சேர்ந்துள்ள நிலை அதோநியாமிகா சக்தி-பொது இயல்பு - தடஸ்த லக்ஷணம். ஆவாரக சக்தி முழு இருள் நிலையை விளைவிப்பது. அதோநியாமிகா சக்தி மங்கலான ஒளி ...இது பொருளல்லவற்றைப் பொருளாகக் காட்டும் மருளாகும்."[79]

என்று கூறுவது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

### 1.1.9.4.2. கன்மக் கோட்பாடு (அல்லது) வினைக்கோட்பாடு

கன்மம் என்பதற்கு வினை என்பது பொருளாகும். ஒருவன் செய்யும் நல்வினை தீவினைகளும் அவற்றின் பயனும் கன்மம் எனப்படும்.[80] இது மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றாலும் செய்யப்படும். இவற்றால் செய்யப்படும் வினைகள் முறையே மானதம், வாசிகம், காயிகம் எனப்படும். அறிந்து செய்யும் வினை 'புத்திபூர்வம்' எனப்படும். அறியாமல் செய்யும் வினை 'அபுத்தி பூர்வம்' எனப்படும்.

ஒரே பொருளான வினை, காரியவேறுபாட்டால் பல வகைகளில் அமைகிறது. அவற்றுள், ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் ஆகிய மூன்றும் முக்கியமாக இங்குக் குறிப்பிடத் தக்கவையாகும். இப்பிறவியில் செய்யப்படும் புண்ணிய பாவங்கள் 'ஆகாமியம்' எனப்படும். பிறவிதோறும் ஈட்டப்படும் புண்ணிய பாவங்கள் 'சஞ்சிதம்' எனப்படும். மேல் எடுக்கும். உடம்பையும், இன்ப துன்பங்களையும் தருவன 'பிராரத்தம்' எனப்படும். இப்பிராரத்த வினையை ஊழ் என்று குறிப்பதுமுண்டு. சஞ்சித வினையின் பயன்பாடே பிராத்த வினையாகும். என்பர். [81]

### 1.1.9.4.3. மாயைக்கோட்பாடு

நல்வினை, தீவினை செய்வதற்குக் கருவியாக உள்ள உடலும் உலகும் மாயை ஆகும். இது ஆதி சூக்குமப் பொருளாகும். இதுவே உலகிற்கு முதற் காரணம் ஆகும். எனவே, உலகில் காணப்படும் பொருள்கள் அனைத்தும் இதன் காரியமாகும். மாயை முதற் பொருளாக இருக்க அதிலிருந்து தனு (உடம்பு) கரணம் (கருவி) புவனம் (உலகு) போகம் (அனுபவ நிலை) என நான்கு வகைகளாகக் காரியங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. 'மா' என்றால் ஒடுங்குதல் என்றும் 'யா' என்றால் வருதல் என்றும் கொண்டு எல்லாக் காரியங்களும் தன்பால் வந்து ஒடுங்குவதற்கும் தன்னினின்றும் தோன்றுவதற்கும் காரணமாய் நிற்பது மாயை ஆகும் என்று விளக்கம் கூறுவர்.[82] சுத்த மாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என மாயை மூன்று வகைப்படும்.

### 1.1.9.4.3.1. சுத்தமாயை

ஆணவம், கன்மம், இவற்றோடு கலக்காமல் தூய்மையாய் நிற்பது சுத்தமாயை எனப்படும். இதில் தோன்றும் தத்துவங்கள் சிவம், சக்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என ஐந்து வகைப்படும். இறைவன் ஐந்தொழில் செய்வதற்கு இவை இடமாதலால் இவற்றிற்குச் சிவத் தத்துவம் என்று பெயர். இச் சுத்தமாயையை இறைவனே தொழிற்படுத்துவான் என்பது சித்தாந்த மரபு.

### 1.1.9.4.3.2. அசுத்தமாயை

ஆணவம், கன்மம், இவற்றோடு கலந்து நிற்பது அசுத்தமாயை எனப்படும். அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என ஏழு வகைப்படும். அசுத்த மாயை இறைவன், அனந்த தேவர் என்னும் வித்தியேசுவரர் மூலம் தொழிற்படுத்துவான் ஆகவே, இவை வித்தியாத் தத்துவம் எனப்படுகின்றன. இவற்றுள் காலம் முதலிய ஐந்து தத்துவங்களும் ஆன்மா செயற்பட முக்கியமானவை என்பதால் இவைப் 'பஞ்ச கஞ்சுகம்' எனப்படும். கஞ்சுகம் என்பதற்குச் சட்டை என்று பொருளாகும்.

### 1.1.9.4.3.3. பிரகிருதி மாயை

அசுத்த மாயையினின்று தோன்றும் 'கலை' என்னும் தத்துவத்தின் செயலாய் நிற்பது பிரகிருதி மாயை எனப்படும். இதனை 'மூலப் பிரகிருதி' என்று வேறு பெயராலும் குறிப்பதுண்டு. எல்லாத் தத்துவங்களுக்கும் மூல காரணம் இதுவே ஆகும். இப்பிரகிருதி மாயையிலிருந்து அந்தக் கரணம் நான்கு, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, பூதங்கள் ஐந்து ஆக இருபத்து நான்கு தத்துவங்கள் தோன்றுகின்றன. இவற்றைச் சீகண்ட ருத்திரர் மூலம் இறைவன் தொழிற்படுத்துகிறான். உயிர்களுக்குத் தலைவராகச் சீகண்டருத்திரர் விளங்குவதால் இத்தத்துவங்கள் ஆன்மத் தத்துவம் எனப்படுகின்றன.

### 1.1.9.4.3.4. தத்துவங்கள்

சிவத் தத்துவங்கள் ஐந்து, வித்தியாத் தத்துவங்கள் ஏழு, ஆன்மத் தத்துவங்கள் இருபத்து நான்கு ஆகத் தத்துவங்கள் முப்பத்தாறாகும். இத்தத்துவங்கள் தோன்றும் காலத்தில் தோன்றி ஒடுங்கும் காலத்தில் ஒடுங்கும் முறைமையினை அட்டவணை

எண் : 3 இல் விளக்கப்பட்டுள்ளது.

இம்முப்பத்தாறு தத்துவங்களின் செயற்பாடுகள் தாத்துவிகம் எனப்படும். அவற்றின் எண்ணிக்கை அறுபது. அவற்றையும் சேர்த்துத் தத்துவங்கள் தொண்ணூற்றாறு என்று கூறுவது சித்தாந்த மரபாகும்.

சுத்த மாயையின் ஒரு பகுதி ஐந்து கலைகளாக விரிந்து நின்று தத்துவங்களைத் தாங்கி நிற்கும். அவை, நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்திய தீதை என்பனவாகும். இவ்வைந்திற்கும் பஞ்ச கலைகள் என்று பெயர். ஆன்மாக் களைப்பந்தத்திலிருந்து நீக்குவது 'நிவர்த்தி' என்றும், நீக்கியதைத் திரும்ப நோக்காது நிறுத்துவது 'பிரதிட்டை' என்றும் அனுமானம், ஆகமம் போன்றன இன்றி அனுபவ ஞானம் தருவது 'வித்தை' என்றும், அனுபவ ஞானம் பெற்று விருப்பு, வெறுப்பு, எண்ணம் முதலியன இன்றி அமைதி பெறுதல் 'சாந்தி' என்றும் அமைதி பெற்றதையும் ஒழியச் செய்வது 'சாந்தியா தீதை' என்றும் பொருள் விளக்கம் கூறுவர்.[83]

### 1.1.9.4.3.5 அத்துவாக்கள்

அத்துவா என்பதற்கு வழி என்று பொருள். மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை, என அத்துவாக்கள் ஆறாகும். இவற்றை முறையே உணர்ந்து ஒவ்வொன்றாகக் கடந்தால் இறைவனை அடையலாம் என்பது சித்தாந்தம். அத்துவாக்கள் ஆறும் சுத்த மாயையின் காரியங்களாக விளங்குகின்றன.

உலகம் சொல்வடிவம் (சுத்தப் பிரபஞ்சம்) பொருள் வடிவம் (அர்த்த பிரபஞ்சம்) என இரு வகைப்படும். ஆறு அத்துவாக்களுள் முதல் மூன்றும் சொல்லுலகம் என்றும், ஏனைய மூன்றும் பொருளுலகம் என்றும் கூறுவர்.[84]

### 1.1.9.5. சாதனக்கோட்பாடு

உயிர் தளைகளிலிருந்து நீங்கி வீடுபேற்றை அடைய உதவும் சாதனங்களைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கனுள் அடக்கிக் கூறுகிறது சித்தாந்தம். சிவாலயத்திற்கும் சிவனடியார்களுக்கும் புறத்தொண்டு செய்வது சரியை எனப்படும். மந்திரம், கிரியை, பாவனை என்ற மூன்றினாலும் அகத்தும், புறத்தும் சிவ வழிபாடு செய்வது கிரியை எனப்படும். மனத்தை நிலைப்படுத்திச் சிவத்தைத் தியானித்துத் தானும் தியானமும் தோன்றாது தியானப் பொருளாகிய

*அட்டவணை : 3*

# சைவ சித்தாந்தம்

## தத்துவ முறை விளக்கப்படம்

பதி　　பசு　　பாசம்

பாசம் → மாயை, கன்மம், ஆணவம்

மாயை → சுத்தமாயை, அசுத்தமாயை

**சுத்தமாயை**
(மாமாயை, குடிலை, குண்டலி, விந்து)
நாதம் (சிவம்) 1
விந்து (சக்தி) 2
சாதாக்கியம் (சதாசிவம்) 3
ஈசுவரம் 4
சுத்த வித்தை 5

**அசுத்தமாயை**
(அதோமாயை, மாயை, மோகினி)
அசுத்தமாயை தத்துவம் 6
காலம் 7　நியதி 8　கலை 9

கலை 9 → பிரகிருதி, வித்தை 10
வித்தை 10
அராகம் 11
புருடன் 12

பிரகிருதி
(மூலப்பகுதி, பிரதானம், மான்)
சித்தம் 13
புத்தி 14

அங்காரம் 15

| தைசதம் 15 அ (சாத்வீகம்) | வைகாரியம் 15 ஆ (ராஜஸம்) | பூதாதி 15 இ (தாமதம்) |
|---|---|---|

கன்மேந்திரியங்கள்

| வாக்கு | பாதம் | பாணி | பாயு | உபத்தம் |
|---|---|---|---|---|
| (வாய்) | (கால்) | (கை) | (அபானம்) | (குறி) |
| 16 | 17 | 18 | 19 | 20 |

ஞானேந்திரியங்கள்

| மனம் | சுரோத்திரம் | துவக்கு | சட்சு | சங்குவை | கிராணம் |
|---|---|---|---|---|---|
| | (செவி) | (மெய்) | (கண்) | (நாக்கு) | (மூக்கு) |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 |

தன்மாத்திரைகள்

| சத்தம் | பரிசம் | ரூபம் | ரசம் | கந்தம் |
|---|---|---|---|---|
| (ஓசை) | (ஊறு) | (ஒளி) | (சுவை) | (நாற்றம்) |
| 27 | 18 | 29 | 30 | 31 |

| ஆகாயம் | வாயு | தேயு | அப்பு | பிருதிவி |
|---|---|---|---|---|
| (வான்வெளி) | (காற்று) | (தீ) | (நீர்) | (நிலம்,மண்) |
| 32 | 33 | 34 | 35 | 36 |

பஞ்ச பூதங்கள்


எண்கள் தத்துவ எண்களைக் குறிக்கும்

1 - 5 வரை சிவத் தத்துவம் (சுத்த தத்துவம், விந்துத் தத்துவம், சுத்த மாயாத் தத்துவம்)

6 - 12 வரை வித்தியாத் தத்துவம் (பசுத் தத்துவம், மோகினித் தத்துவம், அசுத்தமாயாத் தத்துவம்) 13 - 36 வரை **ஆன்மத் தத்துவம்** (பாசத் தத்துவம், பிரகிருதித் தத்துவம்)

அடைப்புக்குறிக்குள் எழுதியுள்ளவை ஒரே பொருட்சொற்கள்

***ஆதாரம் : ராமானுஜாசாரி*** : ர., சைவ சித்தாந்தம்

சிவம் ஒன்றே விளங்கப் பெறுவது யோகம் எனப்படும். முப்பொருள் உண்மைகளைக் குரு உணர்த்தக் கேட்டுச் சிந்தித்துத் தெளிவது நிட்டை கூடல் ஞானம் எனப்படும்.

நல்வினை, தீவினை இரண்டையும், சமமாகக் கருதும் மனநிலை இருவினையொப்பு எனப்படும். ஆணவ மலத்தின் சுத்தி ஆன்ம அறிவை மறைக்க இயலாது வலிகுன்றி நிற்கும் நிலை மலப்பரிபாகம் எனப்படும். இதற்குக் காரணம் இருவினையொப்பாகும். உயிர் இவ்விருவினையொப்புப் பெறும்பொழுது உண்டாவது சத்திநிபாதம் ஆகும். சத்திநிபாதம் என்றால் அருட்சத்தி பதிதல் என்று பொருள். மந்ததரம் (மிகக் குறைவு) மந்தம் (குறைவு) தீவிரம் (விரைவு) தீவிரதரம் (மிக விரைவு) எனச் சக்திநிபாதம் நான்காகும்.

உயிர் மல நீக்கம் பெற்று ஞானம் பெறுவதற்குத் தீக்கை அவசியமானதாகச் சொல்லப்படுகிறது. குருவானவர் தீக்கை செய்வார். இது சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரியம் என நான்காகும்.

தீக்கையில் உபதேசிக்கப்படும் மந்திரங்களுள் முதன்மையானது திருவைந்தெழுத்தாகும். இது தூல பஞ்சாக்கரம் (நமசிவாய) சூக்கும பஞ்சாக்கரம் (சிவாய நம) அதிசூக்கும பஞ்சாக்கரம் (சிவாயசிவ) என மூவகைப்படும். 'சி' என்றால் சிவன் 'வா' என்றால் அருள் ; 'ய' என்றால் உயிர் ; 'ந' என்றால் உயிரை மறைக்கும் திரோதான சக்தி ; 'ம' என்றால் மும்மலங்கள். இதனைச்

> ''சிவன்அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்
> அவன்எழுத் தஞ்சின் அடைவாம்''[65]

என்ற உண்மை விளக்கப் பாடல் வரிகளால் அறியலாகிறது.

### 1.1.9.6. முத்திக் கோட்பாடு

சாதனங்களால் உயிர்பெறும் பயன்கள் இரண்டாகும். அவை, பாசநீக்கம், சிவப்பேறு பெறுதல் என்பனவாகும். உயிர் இரு வினையொப்பு ஏறபட்டதன் பயனாக ஞானம் பெறுகிறது. ஞானத்தால் பெறும்பேறு முத்தி எனப்படுகிறது. இது பரமுத்தி, அபர முத்தி, பரமுத்தி என மூவகைப்படும்.

உயிர் வித்தியாத் தத்துவங்கள் ஏழினும் உள்ள சீகண்ட புவனம் முதலிய உருத்திர உலகங்களை அடைவது பதமுத்தி எனப்படும். உயிர் சிவத் தத்துவம்

ஐந்தினும் உள்ள புவனங்களை அடைவது அபரமுத்தி எனப்படும். உயிர், சிவத்தோடு இரண்டறக் கலப்பது பரமுத்தி எனப்படும்.

சரியை முதலிய நான்கு சாதனங்களால் பெறும் பயன்கள் சாலோகம், சாமீபம், சாரூபம் சாயுச்சியம் ஆகியனவாகும். இவை நான்குமே முத்திதான் என்றாலும் இவை ஒன்றற்கொன்று ஏற்றமாய் நின்று சாயுச்சியும் ஒன்றே முடிவாகிய முத்தி ஆகும் என்பது சித்தாந்த முடிவாகும். இதனை சிவஞான முனிவர்,

> "சரியை முதலிய நான்கும் ஞானமேயாமெனவும், ஆயினும் "அரும்பு, மலர், காய், கனி" (தாயுமானவர் பராபரக்கண்ணி -157) யாதல் போலச் சோபான முறையாகிய தம்முள் வேறுபாட்டான் முறையே ஒன்றற்கொன்று அதிகமாய் நான்காம் எண்ணுமுறைக் கணின்ற ஞானமே முடிவாகிய ஞானமா மெனவும், எனவே, இந்நான்கினும் அறிவு நுணுகி வரவர அறியாமையாகிய மலமும் அம்முறையே தேய்ந்து தேய்ந்து வருதலின், இவற்றின் பயனாகிய சாலோக முதலிய நான்கும் முக்தியேயாமெனவும், ஆயினும், அம்மல நீக்கமும் அவ்வாறு நிகழும் சோபான முறையானே அவை ஒன்றற்கொன்று ஏற்றமாய் அவற்றுள் நான்காமெண்ணு முறைக்கணின்ற சாயுச்சியமொன்றே முடிவாகிய முத்தியாமெனவும் உணர்ந்து கொள்க.[86]

என்று கூறுவது இங்கு நோக்கற் பாலதாகும். இவற்றுள், சாலோகம், என்பது சிவலோகத்தை அடைந்து அங்குள்ள இன்பங்களை நுகர்தல் ஆகும். சாமீபம் என்பது சிவலோகங்களை அடைந்து இன்பங்களை நுகர்தலோடு இறைவனை அணுகி உயர்ந்த இன்பங்களைப் பெறுதல். சாரூபம் என்பது மேற்கூறியவற்றோடு இறைவனுக்குரிய பெருமைகளைத் தானும் பெற்றுச் சிறந்த இன்பத்தைப் பெறுதல். சாயுச்சியம் என்பது இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலை ஆகும்.

ஞானத்தின் படி நிலைகள் பத்தாகும். இவை தசகாரியம் எனப்படும். அவை தத்துவ வடிவு, தத்துவக் காட்சி, தத்துவத் தூய்மை, உயிர் வடிவு, உயிர்க்காட்சி, உயிர்த்தூய்மை, சிவ வடிவு, சிவக்காட்சி, சிவக்கலப்பு, சிவ நுகர்வு என்பனவாகும்.

உயிர்பெறும் ஞானத்தினைப் பாசஞானம், பசு ஞானம், பதி ஞானம் என மூன்று நிலைகளில் விளக்குவர். பாசத்தையே பொருளாக உடைமை பாச ஞானம் எனப்படும். இது தத்துவ வடிவு, தத்துவக் காட்சி, தத்துவத் தூய்மை ஆகிய மூன்றாலும் நீங்கும். பாச ஞானம் நீங்கிய நிலையில் உயிர் தன்னையே பரம் பொருளாக மயங்கி நிற்கும். இம்மயக்க நிலை பசு ஞானம் எனப்படும். இது, சிவக்காட்சி சிவக்கலப்பு என்பவற்றால் நீங்கும். இவ்வாறு பாசங்கள் முற்றும் நீக்குதலே பாச நீக்கமாகும். சிவக் கலப்பில் நிற்பவர்க்கு அருள் விளக்கமும், ஆனந்தத் தோற்றமும் உண்டாகும். அருள் பெறும் ஞானமே பதிஞானம் எனப்படும். இவ்வின்ப நிலையில் அழுந்தி நிற்றல் சிவப்பேறு ஆகும்.

நிட்டை நிலையை எய்தினால், உடம்பொடு கூடிய நிலையிலேயே இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிலை உருவாகும். இதுவே சீவன் முத்தி' எனப்படும். பரமுத்தி என்பது உடம்பை நீங்கிப்பெறும் இன்பம் ஆகும். தமிழில் சீவன் முத்தி பெற்றோரை அணைந்தோர் என்று குறிப்பர்.

இன்பம் என்பது, இறைவனிடத்தில் உள்ளது. உயிரிடத்தில் உள்ளதன்று. உயிர் நுகர்வது இறைவனது இன்பமாகிய சிவானந்தமே ஆகும். எனவே, சிவபெருமானின் திருவடி இன்பமே சித்தாந்தம் கூறும் முக்தி நிலை. இம்முத்தியைப் பெறுவதே ஞானத்தின் முடிந்த பயன் என்பது சித்தாந்த மரபாகும்.

### 1.2. ஆய்வின் நோக்கம்

சிவாகமங்கள் வடமொழியில் உள்ளதால் அவற்றை, வடமொழி அறியாத தமிழறிஞர்களும், தமிழ் மக்களும் படித்துப் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கின்றனர். ''நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்''[87]. என்ற பாரதியாரின் கூற்றுக்கிணங்க அனைத்து நல்லறிஞர்கள் நூல்களும் தமிழ்மொழியில் பெயர்த்தல் அவசியமாகிறது. தமிழ் இலக்கிய வரலாற்றில் முதன்முதல் சிவாகமங்களின் சாரமாகத் தமிழில் நூல் செய்தவர் திருமூலர் ஆவார்.[88] ஆகமங்களைத் தமிழில் செய்ய வேண்டும் என்பதற்காகவே தன்னை இறைவன் படைத்துள்ளான் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். இதனை

**"என்னைநன் றாக இறைவன் படைத்தனன்**
**தன்னைநன் றாகத் தமிழ் செய்யும் ஆறே''[89]**

என்ற திருமந்திரப் பாடல் வரிகளால் அறியலாகும். இத்தகைய உந்துதல்களால் பிறமொழியின் கண் உள்ள சிந்தனைகளைத் தமிழ்மொழியில் பெயர்த்தலை அடிப்படை நோக்கமாகக் கொண்டு இவ்வாய்வேடு விளங்குகிறது.

## 1.3. ஆய்வு முன்னோடிகள்

தற்பொழுது கிடைக்கப்பெறும் சிவாகமங்களுள் பல தமிழிலும் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. அவை, ஆய்வுக் கண்ணோட்டத்தில் மொழி பெயர்க்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆய்வுக் கண்ணோட்டத்தில் ஆய்வுப்பட்டத்திற்காக மொழி பெயர்க்கப்பட்டது என்று பார்க்கும் பொழுது கிரணாகமம்- ஞானபாதம் குறித்த மொழி பெயர்ப்பு ஒன்றுதான் உள்ளது. இம்மொழி பெயர்ப்பும் ஆங்கிலத்தில் செய்யப்பட்டுள்ளது. இம்மொழி பெயர்ப்பினையும் ஆய்வினையும், எஸ்.பி. சபாரத்தினம் என்பவர் சென்னைப் பல்கலைக்கழகம், தத்துவத் துறையில் 1981ஆம் ஆண்டில் அளித்துள்ளார் என்று தெரிகிறது. அந்த வகையில் இந்த ஆய்வேடு தமிழில் செய்யப்படும் முதல் ஆய்வேடாகும்.

## 1.4. ஆய்வுக்கான காரணம்

மூலாகமங்களுள் சுப்பிரபேதாகமத்திற்கும் கிரணாகமத்திற்கும் மட்டும் தான் நான்கு பாதங்களும் கிடைக்கின்றன. கிராணாகமம் ஏற்கனவே, ஆய்வு செய்யப்பட்டு விட்டதால் சுப்பிரபேதாகமத்தினை மொழி பெயர்ப்பு செய்து ஆய்வு செய்ய ஆய்வுத் தலைப்புத் தேர்ந்தெடுக்கப் பெற்றது.

## 1.5. ஆய்வின் அடிப்படை

ஆய்வின் அடிப்படை முதன்மை ஆதாரம், துணைமை ஆதாரம் என இருவகைப்படும். சுப்பிரபேதாகமம் என்ற தலைப்பில் நிறைய ஓலைச் சுவடிகளும் கையெழுத்துப் பிரதிகளும் தமிழக நூலகங்களில் கிடைக்கின்றன. அச்சில் வெளிவந்துள்ள நூல் என்ற வகையில் ஒன்றே ஒன்று மட்டும்தான் கிடைக்கிறது. இது அழகப்பா முதலியார் அவர்களால் 1929 ஆம் ஆண்டு கிரந்த எழுத்தில் வெளியிடப்பட்டதாகும். இந்நூல் முதன்மை ஆதாரமாகக் கொண்டு விளங்குகிறது. இவ்வாய்வின் துணைமை ஆதாரங்களாக, சிவாகமங்கள் பற்றிய நூல்கள், கட்டுரைகள், சைவ சித்தாந்த சாத்திர நூல்கள், மற்றும் தோத்திர நூல்கள் ஆகியன அமைகின்றன.

## 1.6. ஆய்வின் அணுகுமுறை

அழகப்பா முதலியார் அச்சில் வெளியிடப்பட்டுள்ள நூலைப் பார்க்கும் பொழுது பல பிரதிகளைச் சோதித்துப் பார்த்து அமைத்ததாகத் தெரியவில்லை. தமக்குக் கிடைத்த ஒரே ஒரு ஓலைச்சுவடியை வைத்துக் கொண்டு அதை அப்படியே அச்சில் அரங்கேற்றி இருப்பதாகத் தெரிகிறது. எனவே, பல சுவடிகளைப் பார்த்து மூல பாடத்தைச் சரி செய்து கொள்ள வேண்டியது அவசியமாயிற்று. அந்த வகையில் வேறு சில பாடங்களையும் தேடிச்சென்ற போது தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் ஓலைச்சுவடி ஒன்று கிடைத்தது. இது கிரந்த எழுத்தில் உள்ளது. சென்னையில் உள்ள அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடிகள் நூலகத்தில் ஓலைச்சுவடி ஒன்றும், கையெழுத்துப் பிரதிகள் இரண்டும் கிடைத்தன. இவற்றுள் ஓலைச்சுவடி கிரந்த எழுத்திலும், கையெழுத்துப் பிரதிகளில் ஒனறு 'தேவநாகர எழுத்திலும் மற்றொன்று தெலுங்கு எழுத்திலும் உள்ளன. புதுவையில் உள்ள பிரெஞ்சு இந்தியவியல் ஆய்வு நிறுவனத்தில் கையெழுத்துப் பிரதிகள் ஐந்து கிடைத்தன. இவ்வைந்தும் தேவநாகர எழுத்தில் உள்ளன. இத்தகைய பாடங்களை ஒப்பிட்டுப் பார்த்ததில் ஐந்தில் மட்டும்தான் பாடவேறுபாடுகள் இருப்பனவாகத் தெரிய வந்தன. எனவே இந்த ஐந்தையும் மூலபாடத்தோடு ஒப்பிட்டுப் பார்த்து அதைச் சரிசெய்ய எடுத்துக் கொள்ளப்பட்டன. அவ்வகையில் அரசினர் கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகத்தில் R.No. 16782 என்ற எண்ணிட்டுள்ள கையெழுத்துப் பிரதி ஒன்று; புதுவை, பிரெஞ்சு, இந்தியவியல் ஆய்வு நிறுவனத்தில் T. 360, T. 445, T. 979, T. 1117 ஆகிய எண்ணிடப்பட்டுள்ள கையெழுத்துப் பிரதிகள் நான்கு.. ஆக ஐந்து பிரதிகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

தமிழகத்தில் கிரந்த எழுத்துத் தெரிந்தவர்களை விடத் தேவநாகர எழுத்துத் தெரிந்தவர்கள் அதிகமாக இருப்பதாகத் தெரிய வருகிறது. எனவே, கிரந்த எழுத்திலிருந்து தேவநாகர எழுத்திற்கு ஒலிபெயர்ப்பு (Transliteration) செய்து மொழிபெயர்த்து ஆய்வும் மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

மொழி பெயர்ப்புக் கோட்பாடுகள் பலவாகும். அவற்றுள், மூல மொழியிலிருந்து இலக்கு மொழிக்கு மொழி பெயர்க்கும் பொழுது கருத்து விளங்க மொழி பெயர்த்தல் என்பதே மொழி பெயர்ப்பின் அடிப்படைக் கோட்பாடாகும். இக்கோட்பாட்டைப் பற்றிக் கா. சிவத்தம்பி,

"மொழிபெயர்ப்பு என்பது இருமொழி நிலைப்பட்ட ஒரு தொழிற்பாடாகும். ஒரு மொழியில் எடுத்துக் கூறப்பட்ட ஒரு கூற்றை அன்றேல் பொருளை இன்னொரு மொழியில் எடுத்துக் கூற முனையும்பொழுது மொழிபெயர்ப்பு ஏற்படுகின்றது. மொழி பெயர்க்கப்பட வேண்டிய பகுதியை அது கூறப்பட்டுள்ள மொழியை மூலமொழி என்றும், எம்மொழியில் எடுத்துக் கூற வேண்டுமோ அம்மொழியை இலக்குமொழி என்றும் கூறுவர். மூல மொழியிலுள்ள ஒரு மொழி நிகழ்வினை இலக்குமொழி நிகழ்வாக மாற்றுதல் வேண்டும். அம்மாற்ற இறுதியில் மூலமொழியில் கூறப்பட்ட கருத்து, அர்த்தம், தெளிவு, இலக்கு மொழியில் அவ்விலக்கு மொழி தெரிந்தோர்க்கு ஏற்படல் வேண்டும்"[90]

*என்று கருத்துத் தெரிவித்துள்ளார். மேலும், இராம சுந்தரம், 'மொழி பெயர்ப்பைப் படிப்பவர் தன்மையைப் புரிந்து கொண்டு மொழிபெயர்க்க வேண்டும்'[91] என்று மொழிபெயர்ப்புக் குறித்துக் கருத்துத் தெரிவித்துள்ளார். எனவே, மூலமொழிக் கருத்தை இலக்குமொழியில் மொழி பெயர்த்தல் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இம்மொழிபெயர்ப்பு நிகழ்த்தப் பெற்றுள்ளது. ஆக, 1. மூலபாடத்தைக் கிரந்த எழுத்திலிருந்து தேவநாகர எழுத்திற்கு ஒலிபெயர்ப்பு செய்தல், 2. மூலபாடத்தைச் சரிசெய்தல், 3. மூலபாடத்தைத் தமிழில் மொழிபெயர்த்தல், 4. மூலபாடத்தில் ஆய்வு மேற்கொள்ளல் என்ற வகையில் ஆய்வு அணுகுமுறை மேற்கொள்ளப் பெற்றுள்ளது. மூலபாடத்தை ஆய்வு செய்யும் பொழுது விளக்க முறை ஆய்வு* (Descriptive Method) *மேற்கொள்ளப் பெற்றுள்ளது.*

## *1.7. ஆய்வின் எல்லை*

*சுப்பிரபேதாகமம் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்கள் உடையது. சரியாபாதத்தில் 825 சுலோகங்களும், கிரியா பாதத்தில் 3167 சுலோகங்களும், யோக பாதத்தில் 322 சுலோகங்களும், ஞான பாதத்தில் 352 சுலோகங்களும் 4666 சுலோகங்கள் கிடைக்கின்றன. சுப்பிர பேதாகமம் முழுவதும் மொழிபெயர்த்து ஆய்வு செய்வது என்றால் மிகப்பெரிய அளவில் அமைந்து விடும் என்கிற விரிவு அஞ்சி, அதனுடைய ஞான பாதத்தை மட்டும் எடுத்துமொழி*

பெயர்த்து ஆய்வு மேற்கொள்வது என ஆய்வு எல்லை வகுத்துக் கொள்ளப் பெற்றுள்ளது.

## 1.8. ஆய்வேட்டின் அமைப்பு

ஆய்வேடு ஐந்து இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. அவை பின்வருமாறு :

இயல் 1. முன்னுரை

இயல் 2. ஆய்வுப் பின்புலம் (அ) சிவாகமங்களின் தோற்றமும் வளர்ச்சியும்
(ஆ) சுப்பிரபேதாகமம் - ஓர் அறிமுகம்.

இயல் 3. சுப்பிரபேதாகமம் - ஞானபாதம் : தமிழ் மொழிபெயர்ப்பு

இயல் 4. சுப்பிரபேதாகமம் - ஞானபாதம் : ஓர் ஆய்வு.

இயல் 5. முடிவுரை.

### 1.8.1. முன்னுரை

முதல் இயலாக அமையும் முன்னுரையில் சைவ சித்தாந்தம் - பொருள் விளக்கம், அதன் தொன்மை, வரலாறு, நூல்கள், கோட்பாடுகள், ஆகியன உள்ளிட்ட சைவ சித்தாந்தம் பற்றிய ஓர் அறிமுகம், ஆய்வின் நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் காரணம், ஆய்வின் அடிப்படை, ஆய்வு அணுகுமுறை ஆய்வின் எல்லை, ஆய்வேட்டின் அமைப்பு, ஆய்வின் பயன் ஆகியன இடம் பெற்றுள்ளன.

### 1.8.2. ஆய்வுப் பின்புலம்

இரண்டாவது இயலாக விளங்கும் இது, சிவாகமங்களின் தோற்றமும் வளர்ச்சியும், சுப்பிரபேதாகமம் - ஓர் அறிமுகம் என இரு பகுதிகளாக அமைகிறது.

#### 1.8.2.1. சிவாகமங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

இப்பகுதியில் ஆகமம்- சொற்பொருள் விளக்கம், ஆகமத்தின் வேறு பெயர்கள், வேதங்களும் ஆகமங்களும், ஆகமங்களின் வகைகள், சிவாகமங்களின் பிறப்பிடம், அவற்றின் காலம், வகைகள், சார்பு நூல்கள், நுவலும் பொருள், உரைகள் ஆகியன இடம் பெறுகின்றன.

### 1.8.2.2. சுப்பிரபேதாகமம் - ஓர் அறிமுகம்

இப்பகுதியில் சுப்பிரபேதாகமம் - பொருள் விளக்கம், அதன் காலம் முதலியன எடுத்துக் கூறப்பெறுகின்றன. இதன் ஞான பாதத்தைச் சிறப்பாக ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளமையால் அதன் மற்ற பகுதிகளாகிய சரியை, கிரியை, யோகம் ஆகிய மூன்று பகுதிகளில் காணப்படும் செய்திகளின் சுருக்கம் தரப்பட்டுள்ளது.

### 1.8.3. சுப்பிரபேதாகமம் - ஞானபாதம் : தமிழ்மொழி பெயர்ப்பு

மூன்றாவது இயலாக அமையும் இதில் சிவ சிருட்டி விதி படலம், பசு சுருட்டி விதி படலம், அத்துவா விதி படலம், ஆகிய மூன்று படலங்களின் தமிழ் மொழி பெயர்ப்பு தரப்படுகிறது. மூல பாடமும் தேவநாகர எழுத்தில் தரப்படுகிறது. பாட வேறுபாடுகள் அடிக்குறிப்புகள் தரப்பெற்றுள்ளன.

### 1.8.4. சுப்பிரபேதாகமம் - ஞானபாதம் : ஓர் ஆய்வு

நான்காவது இயலாக அமையும் இது, சுப்பரபேதாகமத்தின் ஞான பாதத்தில் காணப்பெறும். இறைக்கோட்பாடு, உயிர்க் கோட்பாடு, தளைக் கோட்பாடு, அத்துவாக்களின் வரிசை முறைகள் அவற்றின் விளக்கம் ஆகியன பற்றி விரிவாக எடுத்து ஆய்வு செய்கிறது. தேவைப்படும் இடங்களில் பிற ஆகம நூல்களோடும் தமிழ்ச் சாத்திர தோத்திர நூல்ளோடும் ஒப்பிட்டு ஆய்வு செய்கிறது.

### 1.8.5. முடிவுரை

ஐந்தாவது இயலாக விளங்கும் இவ்வியல் ஆய்வேட்டின் ஒவ்வோர் இயல்களிலும் தரப்பட்ட ஆய்வு முடிவுகளைத் தொகுத்துத் தருகிறது. இத்துறையில் எதிர்கால ஆய்வு வளர்ச்சிப் பணிக்கு எந்த எந்த வகையில் இவ்வாய்வேடு உதவ வழி வகை செய்கிறது என்பதும் இறுதியில் சுட்டப்பெற்றுள்ளது.

### 1.9. ஆய்வின் பயன்

சைவ சித்தாந்தம் பழைமைக்கு உரியதாக இருந்தாலும் காலந்தோறும் புதுமைகளைத் தன்னகத்தில் ஏற்றுக் கொண்டு புதுப்பொலிவோடு விளங்குகிறது. இத்தகைய நிலையில் சைவ சித்தாந்தத்தை வரலாற்றுக் கண்ணோட்டத்தில் பார்த்தல் அவசியமாகிறது. சைவ சித்தாந்தம் பற்றிய ஒரு முழுமையான வரலாறு

இன்னும் தமிழில் தோன்றவில்லை என்று தெரிகிறது. அத்தகைய வரலாறு தோன்றுவதற்கு இவ்வாய்வேடு மிகுந்த உறுதுணையாக அமையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சைவ சித்தாந்தக் கோட்பாடு தமிழில் தமிழர்களின் சிந்தனையில் தோன்றியதே என்று ஒரு சாராரும், வடமொழியில் வடநாட்டாரின் சிந்தனையில் தோன்றியதே என்று மற்றொரு சாராரும் தமிழகத்தில் நீண்ட காலமாகக் கருத்துத் தெரிவித்து வருகின்றனர். இதற்குத் தீர்வு காண்பது தேவையான ஒன்றாகும். வடமொழியில் உள்ள சிவாகமங்கள் கூறும் சிந்தனைகளைத் தமிழ்ச் சாத்திர தோத்திரங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது அதற்கு ஒரு தீர்வு ஏற்படும். அந்த வகையில் இவ்வாய்வேடு மிக்க உறுதுணை புரியும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தமிழ்மொழிக்கு வளம் சேர்ப்பது தமிழர்களாய்ப் பிறந்தவர்களின் தலையாய கடமையாகும். அந்த வகையில் இவ்வாய்வேடு தமிழ்மொழி வளர்ச்சிக்கு உறுதுணை செய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சிவாகமங்கள் பற்றிய ஆய்வுகள் தமிழகத்தில் மிகக் குறைவாகவே நிகழ்ந்துள்ளன. இவ்வாய்வுகள் விரிவுபடுவதற்கு இவ்வாய்வேடு தூண்டுகோலாக அமையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மக்கள் வாழ்வாங்கு வாழ்ந்து சாந்தியும், சமாதானமும் பெற்று ஈடேற வேண்டும் என்பது மனித வாழ்க்கையின் குறிக்கோளாகும். அந்தக் குறிக்கோளை நிறைவு செய்ய விழைவோர்க்கு இவ்வாய்வேடு உறுதுணையாக அமையும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

# அடிக்குறிப்புகள்

1. திருமந்திரம், பா. 1512.
2. சுத்தானந்த பாரதியார். யோகி ஸ்ரீ., சிவஞான தீபம், ப.13.
3. சித்தலிங்கம். டி.பி., சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும், ப.13.
4. இரத்ினசபாபதி. வை., வீரசைவம், ப.19.
5. கழகத் தமிழ்க் கையகராதி, ப.261.
6. திருமந்திரம், பா. 270.
7. திருக்குறள் எண். 60 பரிமேலழகர் உரை, ப. 26.
8. வச்சிரவேல் முதலியார் க., சைவமும் வைணவமும், ப. 2.
9. தாயுமானவர் பாடல்கள், காடும் கரையும், பா.2.
10. அருணை வடிவேலு முதலியார். சி., சித்தாந்த வினாவிடை, ப.40.
11. கந்தசாமி. சோ.ந., தமிழும் தத்துவமும், ப. 305.
12. சைவ சித்தாந்த அகராதி, ப.114.
13. இரத்தினத்திரயம், சு. 11.
14. வேலுப்பிள்ளை. ஆ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக். 154,155.
15. சுத்தானந்த பாரதியார். யோகிஸ்ரீ., மு.கு.நூ., ப. 11.
16. வரதராஜன் ஜி., திருமந்திர நெறி, ப. 318.
17. இராமச்சந்திரன் தி.ந., 'அணிந்துரை', சைவ மரபும் மெய்ப்பொருளியலும், ப.1.
18. இராசமாணிக்கனார். மா., மொஹஞ்சொதரோ (அல்லது) சிந்துவெளி நாகரிகம்', ப.205.
19. Banerjee. J.N., Pauranic and Tantric Religion, P.64.
20. இராசமாணிக்கனார், மா., மு.கு.நூ,. ப. 190.
21. Banerjee. J.N., OP. Cit,, P. 73.
22. Ibid. P. 64.
23. திருமந்திரம், பா. 1421.
24. காமிகாகமம், கிரியாபாதம், பூர்வபாகம், தந்திராவதாரப்படலம், சு. 119.
25. சித்தலிங்கம். டி.பி., மு.கு.நூ., பக். 18,19.

26. **கைலாசபதி. க., நவீன இலக்கியத்தின் அடிப்படைகள்** பக். 77,78.

27. **Krishnan. P.,** (ed.) 'Editor's Preface', Facets of Saiva Siddhanta, P. vii

"**Saiva Siddhata** is a living religio - Philosophical tradition."

28. **சிங்காரவேலு** முதலியார். ஆ., **அபிதான சிந்தாமணி,** ப. 746.

29. **ஆறுமுக நாவலர், இந்துமத இணைப்பு விளக்கம்,** ப. 26.

30. **இலக்குமணன்.** கி., **இந்தியத் தத்துவஞானம்,** ப. 34.

31. **வேலுப்பிள்ளை.** ஆ., **தமிழர் சமய வரலாறு,** ப. 207.

32. **Pope G.U.** (Trans.) The **Tiruvacagam,** P. IXXIV

*"The Caiva siddhanta system, is the most elaborate influencial and undoutedly the most intrinsically valuable of all religions of Idia. It is peculiarly the South Indian and and Tamil religion; and must be studied by every one who hopes to understand and influence the great South Indian People."*

33. குன்றக்குடி அடிகளார், தவத்திரு., **சைவ சித்தாந்தமும் சமுதாய மேம்பாடும்,** ப. 11

34. **கந்தசாமி,** சோ.ந., 'சைவ சித்தாந்தம்', **தஞ்சை இராஜராஜேச்சுரம் திருக்குட நன்னீராட்டுப்** பெரு விழா மலர், ப.41

35. **மேலது,** ப. 12.

36. **ஞான சம்பந்தன்.** அ.ச. **தத்துவமும் பக்தியும்,** ப. 171.

37. **கோபாலையர்,** தி.வே., 'பண்டைத் தமிழகத்தில் சிவன்' **ஆறாவது உலகச் சைவ மாநாடு சிறப்பு மலர்,** ப. 24.

38. **இராசரத்தின** முதலியார் ஆ., (தொ.ஆ.) **சைவ சமயக் கையேடு,** பக். 184,185.

39. **தொல்.** பொருள். புறம்., நூ. 27.

40. **சுப்பையா.** அ.சொ., **தொல்காப்பியம் சைவ சித்தாந்த நோக்கில்,** ப. 86.

41. **தொல்.** பொருள். மரபு. நூ. 635.

42. **மதுரைக்காஞ்சி,** வ-ள். 453-455.

43. **வித்தியானந்தன்.** சு., **தமிழர் சால்பு,** ப. 126.

44. **ஞானசம்பந்தன்.** அ.ச., **பெரிய புராணம் ஓர் ஆய்வு,** ப. 59-73.

45. **ஐங்குறுநூறு,** பா.1., திருமுருகாற்றுப்படை, வ. 153.

16. மதுரைக் காஞ்சி, வ-ள். 453- 455.

17. புறநானூறு, பா.1.

18. கலித்தொகை, பா.1.

50. அகநானூறு, பா. 131.

51. மணிமேகலை, சமயக்கணக்கர் திறம் கேட்ட காதை, வ-ள். 86-95.

52. சுப்பிரமணியன். நா., கௌசல்யா சுப்பிரமணியன்., இந்தியச் சிந்தனை மரபு, பக் 118.

53. வைத்தியநாதன் . கு., திருமுறைகளில் சைவ சித்தாந்தம், ப. 144.

54. சித்தலிங்கம். டி.பி., மே.கு.நூ. பக் 70-71.

55. தேவசேனாபதி. வ.ஆ., சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள்., ப.30.

56. அப்பர் தேவாரம், 6.78.5.

57. கந்தசாமி. சோ.ந., திருமுறை இலக்கியம், ப. 25.

58. மேலது, ப. 35.

59. தேவசேனாபதி, வ.ஆ., மு.கு.நூ. ப. 27.

60. மேலது, ப. 27.

61. மேலது, ப. 27.

62. மேலது, பக். 29,30.

63. திருமந்திரம், பா. 115.

64. தேவசேனாபதி. வ.ஆ., மு.கு.நூ. ப. 58.

65. சரவணன். நல்லூர். சா., 'சைவ சித்தாந்தம் - ஓர் 'அறிமுகம்' Facets of Saiva Siddhanta, ப. 15.

66. சிவஞான போதம், சூ. 2.

67. அப்பர் தேவாரம், ஐந்தாம் திருமுறை, பா. 893.

68. தேவசேனாபதி. வ.ஆ., மு.கு.நூ. ப. 79.

69. சிவஞான சித்தியார், சுபக்கம் பா. 165.

70. திருவாசகம், சிவபுராணம், வ. 18.

71. தேவசேனாபதி. வ.ஆ., மு.கு.நூ., ப. 81.

72. சரவணன். நல்லூர் சா., மு.கு.நூ., ப. 19

73. தேவசேனாபதி. வ.ஆ., மு.கு.நூ., ப.88

74. Krishnan. P., Divine Grace and Human Freedom Paul Tillich and Saiva Siddhanta P. 69

"According to Saiva Siddhanta, God or Siva is in advaitic relation with the self."

75. சரவணன். நல்லூர். சா., மு.கு.நூ. ப. 21.

76. தேவசேனாபதி. வ.ஆ., மு.கு.நூ., ப. 92.

77. மேலது, ப. 100.

78. மேலது, ப. 101.

79. மேலது, ப. 101,102.

80. அருணாசலம், ப., சைவ சமயம் ஓர் அறிமுகம், ப. 134.

81. சரவணன், நல்லூர். சா., மு.கு.நூ. ப. 27.

82 மேலது, ப. 28.

83. மேலது, ப. 30.

84. மேலது, ப. 30.

85. உண்மை விளக்கம், பா. 41.

86. சிவஞான மாபாடியம். ப. 474.

87. பாரதியார் கவிதைகள், 'தமிழ்' பா.3, வ-ள். 1,2 .

88. கௌசல்யா விஜயன். ஜி., திருமந்திரத்தில் வாழ்வியல் சிந்தனைகள், ப.29.

89. திருமந்திரம், பா. 81.

90. சிவத்தம்பி, கா., இலக்கியமும் கருத்து நிலையும், ப. 57.

91. சுந்தரம். இராம., 'பாரதியின் மொழி பெயர்ப்புகள் ஒரு மதிப்பீடு, பாரதி ஆய்வுக்கோவை, பக் - 86,87 .